உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

காரைக்காலம்மையார்

# திருமுறை




நூலாளர் - திரு. வி. கலியாணசுந்தரனார்

இயற்றிய

## அரும்பதக் குறிப்புரை

மூன்றாம் பதிப்பு




பாலன் பதிப்புக் கழகம்

இராயப்பேட்டை, சென்னை

1947



விலை அணா 10

# பதிப்புரை

ஆண்டவன் ஒருவனே; அவனது அருள் நெறியும் ஒன்றே. அவ்வொன்றற்குப் பல பெயர்கள் வழங்கப்படு கின்றன. அப்பெயர்களுள் மிகத் தொன்மை வாய்ந்தன சில. அச் சிலவற்றுள் ஈண்டுக் குறிக்கத்தக்கன இரண்டு. ஒன்று சமணம்; மற்றொன்று சைவம். இவ்விரண்டும் பண்டை நாளில் ஒன்றாயிலங்கிப் பின்னே பற்பல காரணங்களால் பிரிவுற்றிருத்தல் வேண்டும். இவ்வாறு ஊகஞ் செய்தற்குப் பல சான்றுகளிருக்கின்றன.

சமணர் கூறும் ஆதிமெய்க் குரவராகிய விருஷப தேவரும், சைவர் கூறும் தென்முகப் பரமாசாரியராகிய ஸ்ரீகண்டரும் ஒருவரே என்று இரு சமய நூல்களையும் ஆராய்ந்தோர் கருதுகிறார். சமணர் தம் இறுதிப் பேற்றைச் சிவகதி என்கிறார். சைவரும் தம் இறுதிப் பேற்றைச் சிவகதி என்றே சொல்கிறார். (சிவம் - பரம்பொருள்; சீகண்டர் - தனிமுதற் குரவர். விரிவு சைவ சாத்திரங்களிற் காண்க.) முப்பொரு ளுண்மையிலும் சமணர்க்கும் சைவர்க்கும் பெரிதும் வேற்றுமை இல்லை. இன்னோரன்ன ஒற்றுமைகள் பல இரு சமயத்துக்கும் உண்டு. அவற்றை ஈண்டு விரித்தல் அநாவசியம்.

இயற்கை நெறிக்கு மாறுபட்ட சில கோள்கள் நாளடை வில் உருக்கொண்டு சமணத்தில் புகலாயின. அக்கோள்கள் உலகை வெறுத்தல், உடலையொறுத்தல், பெண்ணைத் துறத்தல், பெண் பிறவிக்கு வீடுபேறில்லையென மறுத்தல் முதலியனவாம். இக்கொள்கைகளைக் கொண்டொழுகிய சமணர் திகம்பரர் என்றும், இவருடன் மாறுபட்டவர் சுவேதாம்பரர் என்றும் அழைக்கப்பட்டனர்.

தென்னாட்டில் திகம்பர ஜைநமே நாளடைவில் பெரிதும் பரவலாயிற்று. அப்பரவுதலைத் தடுத்து இயற்கைச் செந்நெறி யாம் அருள்நெறியை ஓம்புதற் பொருட்டுத் திருஞானசம்பந்த ராதியோர் தோன்றினர். திருஞானசம்பந்தராதியோர் சமண

சமய வேரை அறவே கல்வி வீழ்த்துதற்கே தோன்றினர் என்று கூறுவது தவறு. அவர் அருளிய தமிழ் மறைக்கண் இயற்கைச் செந்நெறியும், ஆண்டவனின் பெண்மைக்கூறும், பெண் பிறவியின் விழுப்பமும், இன்னோரன்ன பிறவும் மிளிர்தல் கண்கூடு.

பெண் பிறவிக்கு வீடுபேறில்லை என்ற கூற்று நிலவிக் கொண்டிருந்த அந்நாளில் காரைக்காலம்மையார், மங்கையர்க் கரசியார், ஆண்டாள் முதலிய பெண்மணிகள் தமிழ்நாட்டில் தோன்றி, ஆண்டவன் அருள்வழி நின்று ஒழுகி, வீடுபே றெய்தினமை ஈண்டுச் சிறப்பாகக் குறிக்கத்தக்கது. அப் பெண்மணிகளுள் ஒருவராகிய காரைக்காலம்மையார்க்குப் புனிதவதியார், பேயார் முதலிய வேறு பெயர்களும் வழங்கப் படுகின்றன. அவற்றின் வரலாற்றைப் பெரிய புராணம் முத லிய நூல்களிற் காண்க.

காரைக்காலம்மையார் வரலாறு பெரியபுராணத்தில் விரித்து ஓதப்பட்டிருக்கிறது. அம்மையார், காரைக்காலில் தனதத்தன் என்பார்க்கு அருந்தவப் புதல்வியாய்த் தோன்றினரென்றும், சிவபத்தி சிவனடியார் பத்தி மீக்கூர வளர்ந்து வந்தாரென்றும், அவர் நாகப்பட்டினத் தோன்றலாகிய பரமதத்தனை மணந்து இல்லறம் நடாத்தி வந்தாரென்றும், ஒருநாள் பரமதத்தனைக் காணவந்த சிலர் அவனுக்கு இரண்டு மாங்கனிகள் ஈந்தாரென் றும், அக்கனிகளிரண்டும் பரமதத்தனால் வீட்டுக்கு அனுப்பப் பட்டன என்றும், கறியமுது சமைக்கு முன்னர் ஒரு சிவ னடியார் வீடு நோக்கி எழுந்தருளினரென்றும், அம்மையார் கறியமுதுக்குப் பதிலாக மாங்கனிகளிலொன்றை வைத்து அவ் வடியவருக்கு அமுது படைத்தாரென்றும், பின்னை போந்து வழக்கப்படி உணவுகொண்ட பரமதத்தனுக்கு எஞ்சியுள்ள மாங்கனியொன்றை அம்மையார் படைத்தாரென்றும், அக்கனி யின் நல்லினிப்பை யுணர்ந்து மற்றுமொரு கனியை அவன் விழைந்தானென்றும், அம்மையார் நடுக்குற்று உள் நுழைந்து ஆண்டவனை வேண்டி நின்றாரென்றும், ஆண்டவனருளால் அம்மையார் கரத்தே ஓரினிய மாங்கனி வந்தது என்றும், அதைக் கொணர்ந்து அம்மையார் நாயகனுக்குப் படைத்தா

ரென்றும், அக்கனியின் தெவிட்டா இனிப்பு நாயகனை வியப்புறச் செய்ததென்றும், 'மண்ணுலகில் தோன்றாத கனியே இது' என்ற உணர்ச்சி அவன்பால் எழுந்ததென்றும், அவ்வெழுச்சி மேலீட்டான் உண்மை யுணர அவன் அம்மை யாரை நோக்கி வினவினனென்றும், அம்மையார் நிகழ்ந்ததை உரைத்தாரென்றும், 'அப்படியா! அப்படியாயின் மற்றுமொரு கனி கொண்டுவா பார்ப்போம்' என்று கேட்டனனென்றும், அது கேட்ட அம்மையார் அறைக்குள் நுழைந்து அருள் வழி நின்று வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈயும் அருள் வள்ளலை நினைந்து நினைந்து உருகி உருகிக் கையேந்தி நின்றார் என்றும், ஆண்டவனருளால் அம்மையார் திருக்கரத்தில் புலன்களையெல்லாங் கவரத்தக்க ஓரழகிய மாங்கனி விளங்கிற் றென்றும், அதை அவர் உவப்புடன் கொண்டுவந்து கணவ னிடஞ் சேர்த்தாரென்றும், அவன் அதிசயித்து அக்கனியை எடுத்தபோது அது மறைந்தொழிந்த தென்றும், அந்நிகழ்ச்சி கண்ட பரமதத்தன், 'இவள் மானிடமல்ல; தெய்வம். இவ ளுடன் வாழ்தல் தவறு' என்று கருதிச் சின்னாளில், வாணி பத்தின் பொருட்டு வேற்றூர் சென்று திரும்புவான் போன்று காரைக்காலை விடுத்துப் பாண்டிநாடு போந்து அங்கேயே வதிந்து, வேறொரு பெண்ணை மணந்து, அவள் வழித்தோன் றிய ஒரு பெண் குழவிக்குத் தனது முதல், மனைவியின் பெயராகிய **புனிதவதி** என்ற பெயரைச் சூட்டி, அம்மை யாரைத் தனது குலதெய்வமாக்கொண்டு வழிபட்டு வந்தன னென்றும், அவன் பாண்டிநாட்டில் வாழ்தலைக் காரைக்காலி லுள்ள உறவினர் தெரிந்து அம்மையாரை அழைத்துச் சென்று பாண்டிநாடு புகுந்தன ரென்றும், புகுந்தவர் தமது வரவைப் பரமதத்தனுக்குத் தெரிவித்தனர் என்றும், அவன் ஆண்டுள்ள மனைவி மகளுடன் போந்து அம்மையார் திருவடி யில் வீழ்ந்து 'தெய்வமே' என்று வணங்கின னென்றும், அம்மையாரைத் தெய்வமாக் கொண்டு, தனக்குப் பிறந்த குழந்தைக்கு அம்மையாரின் திருநாமத்தைச் சூட்டியிருத்தலை யும் அறிவித்துக்கொண்டன னென்றும், அவனது நிலை யுணர்ந்த அம்மையார் ஊனுடலை உதறி என்புடலைத் தாங்கின

ரென்றும், அவ்வுடல்கொண்டு தலைகீழாய் நடந்து கயிலையங்கிரி போந்தாரென்றும், அங்கே அவர் ஆண்டவனால் 'அம்மையே!' என்று அழைக்கப்பெற்றாரென்றும், பின்னே அம்மையார் ஆண்டவன் கட்டளைப்படி திருவாலங்காடு சேர்ந்து ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியின் திருவடிக்கீழிருந்து என்றும் மாறா இன்பநுகரும் பெறுதற்கரிய பேற்றைப் பெற்றாரென்றும் பெரிய புராணங் கூறுகிறது.

அம்மையார் பேய்க்கோலந் தாங்கிய பின்னை, ஆண்டவனைப் போற்றிப் பாடிய பாக்கள், 'மூத்த திருப்பதிகம்', 'இரட்டை மணிமாலை', 'அற்புதத் திருவந்தாதி' என்ற பிரபந்தங்களாக உலகில் வழங்கப்படுகின்றன. இப்பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையில் ஆன்றோர்களால் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

அம்மையார் அருட்பாக்களை ஒரு தனி நூலாக வெளியிடின், தமிழ் மக்களுக்குச் சிறப்பு முறையில் அவை பயன் படுமென்று கருதி, அப்பாக்களைக்கொண்ட இந்நூல் அரும்பதக் குறிப்புரையுடன் வெளியிடப்பட்டிருக்கிறது. அம்மையாரின் பாக்களிலுள்ள இயற்கை வருணனையும், திருவருட்டிறமும், தத்துவ நுட்பமும், ஆண்டவன் உருவ அருவ அருவுருவ இயல்களும், ஆண்டவன் திருவுரு செம்மையும் நீலமுமாகப் பொலியும் நிலையும், பிறவும் பாவலர்க்கும், திருவருள் நெறியினர்க்கும், தத்துவ ஆராய்ச்சியினர்க்கும் பெருவிருந்து அளிப்பன என்று சொல்ல வேண்டுவதில்லை.

முன்னாளில் பெண்மணிகள் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினார்களென்பதும், ஆண்டவன் அருள்வழி நின்று அவ்வழியோம்பினார்களென்பதும், தத்துவ ஞானத்தில் தலைசிறந்தவர்களா யிருந்தார்களென்பதும் இத் திருமுறையின் உள்ளுறையால் நனிவிளங்குதல் காண்க.

மூலம் பழைய ஓலைப்பிரதிகளுடன் ஒப்புநோக்குப் பெற்றமை ஈண்டுக் குறிக்கற்பாலது. இத்தொண்டில் அன்புடன் தாமே வலிந்து ஈடுபட்டவர் தமிழறிஞர் திரு. மு. அருணாசலம் அவர்கள், எம். எ. இவர்க்கு எமது நன்றியறிதல் உரியதாக.



# காரைக்காலம்மையார் தோத்திரம்



### திருக்கூவப் புராணம்

கிடந்து கண்களிற் கேட்கும வன்புகல்
அடைந்த கைகொ டுயிர்ப்பவ னத்தன்வாழ்
வடந்த யங்கு வனத்திற் றலையினால்
நடந்த அம்மை பதமலர் நண்ணுவாம்.

### சீகாளத்தி புராணம்

தோற்ற மில்பரஞ் சோதிதன் வாய்திறந்
தாற்ற அன்புடன் அம்மையே யென்னுமோர்
பேற்றை முன்பெறப் பேயுரு வெய்திய
சாற்ற ரும்புகழ்த் தாயை வணங்குவாம்.

### திருவாலங்காட்டுப் புராணம்

ஓதாமற் பலகலையு முணர்ந்தொளிருஞ்
    சிவஞான உருவ மாகி
போதாருங் கயிலையரன் அம்மைவா
    எனஅப்பா புகுந்தே னென்று
தாதாரு மலர்க்கரத்துச் சதிக்கிசையப்
    பாணிதிருத் தாள மேந்தும்
வாதாடும் பிரானடிக்கீழ் காரைக்கா
    லம்மைபதம் வணங்கி வாழ்வாம்.

### திருத்தொண்டர் திருவந்தாதி

நம்பன் திருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டும்
உம்பர் மிசைத்தலை யால்நடந் தேற வுமைநகலுஞ் [தேன்
செம்பொன் னுருவனென் னம்மை யெனப்பெற்றவள்செழுந்
கொம்பி னுகுகாரைக் காலினின் மேய குலதனமே.

### திருத்தொண்டர் புராண சாரம்

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன் மிக்க
    தனதத்தன் தரும்புனித வதியார் மாவின்
செங்கனிகள் திருவருளா லழைப்பக் கண்டு
    திகழ்கணவ னதிசயித்துத் தேச நீங்க
அங்கவுட லிழந்துமுடி நடையா லேறி
    அம்மையே யெனநாதன் அப்பா வென்று
பொங்குவட கயிலைபணிந் தாலங் காட்டிற்
    புனிதனடம் அனவரதம் போற்றி னாரே.



# உள்ளுறை




உ

திருச்சிற்றம்பலம்

காரைக்காலம்மையார்

அருளிச்செய்த

# திருஆலங்காட்டு மூத்த திருப்பதிகம்

## க. பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

கொங்கை திரங்கி நரம்பெழுந்து
குண்டுகண் வெண்பற் குழிவயிற்றுப்
பங்கி சிவந்திரு பற்கள்நீண்டு
பரடுயர் நீள்கணைக் காலோர்பெண்பேய்
தங்கி யலறி யுலறுகாட்டில்
தாழ்சடை யெட்டுத் திசையும்வீசி
அங்கங் குளிர்ந்தன லாடுமெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. க

---

க. திரங்கி - சுருண்டு ; சுருங்கி. குண்டு - உருண்டை ; குழி எனினுமாம். பங்கி - மயிர். பரடு - கால்கணு. கணைக்கால் - முழங்காலின் கீழது ; பரட்டுக்கு மேலது ; திரண்டிருப்பது. உலறு - கோபக்குறியுடன் கூவும் (உலறல் - சினக்குறிப்புத் தோன்ற ஒலித்தல்).

கள்ளிக் கவட்டிடைக் காலைநீட்டிக்
கடைக்கொள்ளி வாங்கி மசித்துமையை
விள்ள எழுதி வெடுவெடென்ன
நக்கு வெருண்டு விலங்குபார்த்துத்
துள்ளிச் சுடலைச் சுடுபிணத்தீச்
சுட்டிட முற்றுஞ் சுளிந்துபூழ்தி
அள்ளி அவிக்கநின் றாடுமெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. ௨

வாகை விரிந்துவெண் நெற்றொலிப்ப
மயங்கிருள் கூர்நடு நாளையாங்கே
கூகையொ டாண்டலை பாடஆந்தை
கோடதன் மேற்குதித் தோடவீசி

---

௨. கவடு - சந்து. கடைக்கொள்ளி - கொள்ளியின் கடையை (கரியுள்ள பாகத்தை). வாங்கி - இழுத்து ; கழற்றி. மசித்து - நசித்துக் குழைத்து. விள்ள - விளங்க ; திறப்பாக. வெடு வெடு - கடுமையாகச் சினந்து (கடுமையான சினக் குறிப்பு). நக்கு - சிரித்து (வெகுளி நகை). வெருண்டு - அஞ்சி (நீடுநில்லாத அச்சம் ; கதுமெனத் தோன்றி மாய்வது). விலங்கு - குறுக்கு. ('விலங்கரு வெஞ்சுரம்'—கலித்தொகை : ௧௫௦:௬). சுளிந்து - சினந்து (இதுவும் ஒருவிதச் சினக்குறிப்பு). பூழ்தி - புழுதி.

௩. வாகை - வாகை மரம். இம்மரத்தடியில் பேய்கள் கூடுவது வழக்கம். ('காய்பசிக் கடும்பேய்க் கணங்கொண் டீண்டு - மாமலர் பெருஞ்சினை வாகை மன்றமும்'—மணிமேகலை : ௬ : ௮௨-௩) நெற்று - உலர்ந்த பழங்கள் அல்லது காய்கள் ('வாகைவெண் ணெற் றொலிக்கும் - வேய்பயி லழுவம்'—குறுந்தொகை : ௭ ; 'காய்ந்த வாகை நெற்றொலிப்ப'—பெரியதிருமொழி - ௧). இருள்கூர் நடுநாள் - இருள் மிக்க நடுஇரவில் ; நள்ளிரவில் என்றபடி ('இருள்கிழிப் பது போன் மின்னி வானம் - துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்'—அகநானூறு : ௭௨ : ௧-௨ ; 'நிறைநீர்ப் புள்ளும்-காவுறை பறவையும் நாவுள் ளழுந்தி - விழவுக்களியடங்கி முடிவுகண் டுயின்று - பழவிறன் மூதூர் பாயல்கொன்ற நடுநாள்'—மணிமேகலை : ௭ : ௬௦ - ௩). கூகை - கோட்டான். ஆண்டலை - ஆண்டலைப் பறவை (கோழி

ஈகை படர்தொடர் கள்ளிநீழல்
ஈமம் இடுசுடு காட்டகத்தே
ஆகங் குளிர்ந்தன லாடுமெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. ரு

குண்டிலோ மக்குழிச் சோற்றைவாங்கிக்
குறுநரி தின்ன அதனைமுன்னே
கண்டிலோ மென்று கனன்றுபேய்கள்
கையடித் தோடிடு காடரங்கா
மண்டல நின்று குணலமிட்டு
வாதித்து வீசி யெடுத்தபாதம்
அண்ட முறநிமிர்ந் தாடுமெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. சு

---

யினங்களில் இஃதொன்று ; இடுகாட்டில் வதிவது ; நடுஇரவில் கூட்டமாக வந்து கத்துவது ; ஆண்மகன் தலையையொத்த தலையையும் பறவையுடலை யொத்த உடலையும் உடையது. 'ஊண்டலை துற்றிய ஆண்டலைக் குரலும்'—மணிமேகலை : சு - எஎ). கோடதன்மேல் - மரக்கொம்பின்மீது. ஈகை - இண்டங்கொடி. ஈமம் இடு - பிணத்தைச் சுடுதற்கு விறகுகளை யடுக்கும். (ஈமம் - பிணஞ்சுடுதற்கு அமைக்கும் விறகடுக்கு ; 'கரிபுற விறகின் ஈம ஒள்ளழல்'—புறநானூறு உ௩௧). ஆகம் - உடல் ; மார்பு.

சு. குண்டில் - சிறுசெய் ; சிறுநிலம் ; பாத்தி ; ஆழத்திலே எனக் கொள்வோருமுளர். ஓமக்குழி - ஓமக்குண்டத்து. கனன்று - சினந்து. இடுகாடு அரங்கு ஆம் மண்டலம் - சுடுகாடெனும் சபையாகிய மண்டலம். மண்டலம் - வட்டத்தில். குணலம் - கொக்கரிக்கை ; வீராவேசத்தால் கொக்கரித்தல் ; ('நின்றங்குளாளமிட்டு' என்பதும் பாடம் ; உள்ளாளம் - ஒருவகைக் கூத்து ; கூத்து விகற்பம்).

விழுது நிணத்தை விழுங்கியிட்டு
வெண்தலை மாலை விரவப்பூட்டிக்
கழுதுதன் பிள்ளையைக் காளியென்று
பேரிட்டுச் சீருடைத் தாவளர்த்துப்
புழுதி துடைத்து முலைகொடுத்துப்
போயின தாயை வரவுகாணு(து)
அழுதுறங் கும்புறங் காட்டிலாடும்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. ரு

பட்டடி நெட்டுகிர்ப் பாறுகாற்பேய்
பருந்தொடு கூகை பகண்டைஆந்தை
குட்டி யிடமுட்டை கூகைபேய்கள்
குறுநரி சென்றணங் காடுகாட்டிற்
பிட்டடித் துப்புறங் காட்டிலிட்ட
பிணத்தினைப் பேரப் புரட்டிஆங்கே
அட்டமே பாயநின் ருடுமெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. சு

---

ரு. விழுது - நெய்விழுது ; வெண்ணெய். நிணம் - கொழுப்பு. கழுது - பிசாசு. புறங்காடு - சுடுகாடு.

சு. பட்டு - மடிந்த ; பட்டுப்போன்ற எனினுமாம். நெட்டு உகிர் - நீண்ட நகம். பாறுகால் - வழுக்கும் கால் ; பருந்துகால் எனினுமாம். ('பாதியிற் பிலந்துழாவு பாறுகால் மாறுகால்'—தக்கயாகப்பரணி ; 123). கூகை - கோட்டான். பகண்டை - சில்லைப் பறவை. பாறுகால் பேய் குட்டியிட, பருந்தொடு கூகை பகண்டையாந்தை முட்டையிட எனக் கூட்டுக. கூகை - பேராந்தை ; சகோரம். அணங்கு - பேய்மகள். பிட்டு அடித்து. அட்டமே - அண்டமே ; அட்டத் திசையுமே ; பக்கலில் விரிந்து புரியும் வீரநடனம் என்போரு முளர்.

சூழலும் அழல்விழிக் கொள்ளிவாய்ப்பேய்
சூழ்ந்து துணங்கையிட் டோடியாடித்
தழலுள் எரியும் பிணத்தைவாங்கித்
தான்தடி தின்றணங் காடுகாட்டிற்
கழலொலி யோசைச் சிலம்பொலிப்பக்
காலுயர் வட்டணை யிட்டுநட்டம்
அழலுமிழ்ந் தோரி கதிக்கஆடும்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. எ

நாடும் நகரும் திரிந்துசென்று
நன்னெறி நாடி நயந்தவரை
மூடி முதுபிணத் திட்டமாடே
முன்னிய பேய்க்கணஞ் சூழச்சூழக்

எ. துணங்கை - ஒருவகைக் கூத்து (பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத் - துடக்கிய நடையது துணங்கை யாகும்). வாங்கி - இழுத்து. தடி - ஊன்தசை. ஓசை - இயற்கை ஓசையுடைய ('ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே'—அப்பர் : திருவையாறு). ஒலிப்ப - எதிரொலிப்ப. வட்டணை - ஒருவித விளையாட்டு; தாளமிடுவது போன்றது (கைத்தலங் காட்டல்; கமல வர்த்தனை; 'மாணிழை வளைக்கை தம்மால் வட்டணை போக்குகின்றாள்'—சிந்தாமணி : 1257). ஓரி - சடை (பொன்னொளிர் சடையாதலின் 'அழலுமிழ்ந்து' என்றார்). கதிக்க - ஒலிக்க.

அ. நன்னெறி நாடி நயந்தவரை - சன்மார்க்கத்தை நண்ணி நின்ற நல்லவரை. முதுபிணம் - முது பேய் ('குணபும் பிணமும் பேய்பெயர் கூறும்'—பிங்கலந்தை : ககள). மூடி முது பிணத்து இட்டம் மாடே - சீலையால் மூடி முதுப் பேயின் யாகத்தின் பக்கம்; (சீலையால் மூடி முதுப்பிணம் இடப்பட்ட இடத்தில் என்னலுமாம்; திட்டமாடே எனக்கொண்டு திட்டப்படி என்று கூறுவோருமுளர்).

காடுங் கடலும் மலையுமண்ணும்
விண்ணுஞ் சுழல அனல்கையேந்தி
ஆடும் அரவப் புயங்கனெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே.) அ

துத்தங் கைக்கிளை விளரிதாரம்
உழையிளி ஓசைபண் கெழுமப்பாடிச்
சச்சரி கொக்கரை தக்கையோடு
தகுணிதந் துந்துபி தாளம்வீணை
மத்தளங் கரடிகை வன்கைமென்தோல்
தமருகங் குடமுழா மொந்தைவாசித்(து)
அத்தனை அமைவினோ டாடுமெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. கூ

---

முன்னிய - அணுகிய ('மூவிரு காவத முன்னுந ரின்றி'—மணிமேகலை : உ௫ : கக). புயங்கன் - புயங்கம் என்னும் நடனஞ் செய்வோன் (புயங்கம் - ஒருவித நடனம்).

க. துத்தம், கைக்கிளை, விளரி, தாரம், உழை, இளி, ஓசை : இவை இசை ஏழைக் குறிப்பன. ஓசை - குரல். (இவ்வேழும் பிறக்குமிடம் :— 'குரலது மிடற்றில் துத்தம் நாவினில் - கைக்கிளை அண்ணத்தில் சிரத்தில் உழையே - இளிநெற் றியினில் விளரி நெஞ்சினில் - தாரம் நாசியில் தம்பிறப் பென்ப'—பிங்கலந்தை : ௩௧உ). கெழும - பொருந்த. சச்சரி......மொந்தை : இவை வாத்தியங்கள். (சச்சரி - சிறு பறை. கொக்கரை - சங்கு. தக்கை - ஒருவிதப் பறை ; பம்பை. தகுணிதம் - பேரி. துந்துபி - முரசு. கரடிகை - ஒருவகைப் பறை ; தோற்கருவி ; கரடிபோல் ஒலிப்பது. வன்கை - ஒருவகைத் தோற்கருவி. மென்தோல் - மெல்லிய தோலால் செய்யப்பட்ட கேடகம். தமருகம் - உடுக்கை. குடமுழா - ஒருவகை மத்தளம். மொந்தை - ஒருகண் பறை). அத்தனை அமைவினோடு - அத்தனை அமைப்புடன்.

புந்தி கலங்கிப் பொறிமயங்கி
இறந்தவ ரைப்புறங் காட்டிலிட்டுச்
சந்தியில் வைத்துக் கடமைசெய்து
தக்கவர் இட்டசெந் தீவிளக்கா
முந்தி அமரர் முழவினேசை
திசைகது வச்சிலம் பார்க்க ஆர்க்க
அந்தியின் மாநட மாடுமெங்கள்
அப்ப னிடந்திரு ஆலங்காடே. கo

ஒப்பினை யில்லவன் பேய்கள்கூடி
ஒன்றினை ஒன்றடித் தொக்கலித்துப்
பப்பினை யிட்டுப் பகண்டைபாடப்
பாடிருந் தந்நரி யாழமைப்ப
அப்பனை அணிதிரு ஆலங்காட்டுள்
அடிகளைச் செடிதலைக் காரைக்காற்பேய்
செப்பிய செந்தமிழ் பத்தும்வல்லார்
சிவகதி சேர்ந்தின்ப மெய்துவாரே. கக

திருச்சிற்றம்பலம்

---

கo. புந்தி - புத்தி ; கரணங்களுள் ஒன்று. (கரணங்கள்: மனம் சித்தம் அகங்காரம் புத்தி). பொறி - அறிவு ; ஞாபகம் ; மனமுமாம். கடமை - ஈமக்கடன். முழவின் - மத்தளத்தின். திசைகதுவ - திசைதோறும் விரைந்து பரவ. ஆர்க்க - ஒலிக்க.

கக. ஒக்கலித்து - கூட்டமாகக் கூடி ஆரவாரித்து (வெற்றி கருதி ஆர்த்தல் ; வாய்கொட்டுதல்). பப்பினையிட்டு - பரவி வட்டமாக நின்று. பப்பினை - பம்பையினை எனினுமாம். பகண்டை - ஒரு வகைப் பறவை ; இங்கே வாச்சியமுமாம். பாடு - பக்கம். செடிதலை - புதர்போல் படர்ந்த மயிர்த்தலை.

## உ. பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

எட்டி இலவம் ஈகை சூரை
காரை படர்ந்தெங்குஞ்
சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி
சோர்ந்த குடர்கௌவப்
பட்ட பிணங்கள் பரந்த காட்டிற்
பறைபோல் விழிகட்பேய்
கொட்ட முழவம் கூளி பாடக்
குழக னாடுமே. க

நிணந்தான் உருகி நிலந்தான் நனைப்ப
நெடும்பற் குழிகட்பேய்
துணங்கை எறிந்து சூழ நோக்கிச்
சுடலை நவிழ்த்தெங்கும்
கணங்கள் கூடிப் பிணங்கள் மாந்திக்
களித்த மனத்தவாய்
அணங்கு காட்டில் அனல்கை யேந்தி
அழக னாடுமே. உ

---

க. இலவம் - காட்டுப் பஞ்சுமரம். ஈகை - இண்டங்கொடி. சூரை - ஒருவிதக் கொடிச்செடி; இதற்குச் சூரல் என்றும் பெயர். பட்ட - இறந்துபட்ட. பரந்த - எங்கும் நிரம்பியுள்ள; பிணக்காடா யுள்ள. முழவம் - மத்தளம். கூளி - பூதம். குழகன் - அழகன்.

உ. நிணம் - கொழுப்பு. துணங்கை - ஒருவகைக் கூத்து (மேலே பார்க்க). நவிழ்த்து - அவித்து. மாந்தி - புசித்து. அணங்கு - பேய்மகள்.

புட்கள் பொதுத்த புலால்வெண் தலையைப்
புறமே நரிகவ்வ
அட்கென் றழைப்ப ஆந்தை வீச
அருகே சிறுகூகை
உட்க விழிக்க ஊமன் வெருட்ட
ஓரி கதித்தெங்கும்
பிட்க நட்டம் பேணும் இறைவன்
பெயரும் பெருங்காடே. ௩

செத்த பிணத்தைத் தெளியா தொருபேய்
சென்று விரல்சுட்டிக்
கத்தி யுறுமிக் கனல்விட் டெறிந்து
கடக்கப் பாய்ந்துபோய்ப்
பத்தல் வயிற்றைப் பதைக்க மோதிப்
பலபேய் இரிந்தோடப்
பித்த வேடங் கொண்டு நட்டம்
பெருமா னாடுமே. ௪

முள்ளி தீந்து முளரி கருகி
மூளை சொரிந்துக்குக்
கள்ளி வற்றி வெள்ளில் பிறங்கு
கடுவெங் காட்டுள்ளே

---

௩. புட்கள் - பறவைகள். பொதுத்த - துளைத்த. அட்க - அணுகுக ; நெருங்குக. உட்க - அஞ்ச. சிறு கூகை - சிறு கோட்டான் ; சிறு ஆந்தையுமாம். ஊமன் - பெருங்கோட்டான். ஓரி - கிழநரி. கதித்து - கூவி. பிட்க - பிய்க்க ; பிள்ளச் செய்ய.

௪. உறுமி - விலங்குபோல் உறுமி. இரிந்து ஓட - பலவாறு பிரிந்து ஓட.

௫. முள்ளி - முள்ளிச் செடி. முளரி - விறகு. உக்கு - இற்று. வெள்ளில் - விளாமரம் ; பாடையுமாம்.

புள்ளி யுழைமான் தோலொன் றுடுத்துப்
புலித்தோல் பியற்கிட்டுப்
பள்ளி யிடமும் அதுவே யாகப்
பரம னாடுமே. ரு

வாளைக் கிளர வளைவால் எயிற்று
வண்ணச் சிறுகூகை
மூளைத் தலையும் பிணமும் விழுங்கி
முரலும் முதுகாட்டில்
தாளிப் பனையின் இலைபோல் மயிர்க்கட்
டழல்வாய் அழல்கட்பேய்
கூளிக் கணங்கள் குழலோ டியம்பக்
குழக னாடுமே. சு

நொந்திக் கிடந்த சுடலை தடவி
நுகரும் புழுக்கின் றிச்
சிந்தித் திருந்தங் குறங்குஞ் சிறுபேய்
சிரமப் படுகாட்டின்
முந்தி அமரர் முழவி னோசை
முறைமை வழுவாமே
அந்தி நிருத்தம் அனல்கை யேந்தி
அழக னாடுமே. எ

---

ரு. பியல் - தோள் ; பிடரி ; முதுகு.

சு. வாளை - ஒளியை. கிளர - எழுப்ப ; வீச. வால் எயிற்று - வெண்பற்களையுடைய ; ('வாளைக் கிளைய வளைவாள் எயிற்று வண்மைச் சிறுகூகை' என்பதும் பாடம்). முரலும் - கதறும். முதுகாடு - சுடுகாடு. கூளிக்கணங்கள் - பூதகணங்கள்.

எ. நொந்தி - அவிந்து ; வெறுமையாக ; வறியதாக (தின்பதற் கொன்றுமில்லாமல்). புழுக்கு - ஆகாரம்.

வேய்க ளோங்கி வெண்முத் துதிர
வெடிகொள் சுடலையுள்
ஓயும் உருவில் உலறு கூந்தல்
அலறு பகுவாய
பேய்கள் கூடிப் பிணங்கள் மாந்தி
அணங்கும் பெருங்காட்டில்
மாய னாட மலையான் மகளும்
மருண்டு நோக்குமே. அ

கடுவன் உகளும் கழைசூழ் பொதும்பிற்
கழுகும் பேயுமாய்
இடுவெண் தலையும் ஈமப் புகையும்
எழுந்த பெருங்காட்டில்
கொடுவெண் பிறையும் புனலும் ததும்பக்
கொள்ளென் றிசைபாடப்
படுவெண் துடியும் பறையுங் கறங்கப்
பரம னாடுமே. கூ

---

அ. வேய்கள் - மூங்கில்கள். ஓயும் - தளரும். உலறு கூந்தல் - நிமிர்ந்து உறுத்து நிற்குந் தலைமயிர். அலறு பகுவாய - கதறும் பிளந்த வாயினையுடையனவாகிய. மாந்தி - புசித்து. அணங்கும் - அஞ்சும். மாயன் - சிவபெருமான். மலையான் மகள் - பார்வதிதேவி.

கூ. கடுவன் - ஆண்குரங்கு. உகளும் - பாயும். கழை - மூங்கில். பொதும்பில் - பொந்தில்; புதரில். ஈமப்புகையும் - எரிந்து கரிந்த விறகடுக்கினின்றும் எழும் புகையும். புனலும் - கங்கையும். கொள் - கொல் (இஃது இக்கால வழக்கு). துடி - உடுக்கை. கறங்க - ஒலிக்க.

குண்டை வயிற்றுக் குறிய சிறிய
நெடிய பிறங்கற்பேய்
இண்டு படர்ந்த இருள்சூழ் மயானத்
தெரிவாய் எயிற்றுப்பேய்
கொண்டு குழவி தழுவ வெருட்டிக்
கொள்ளென் றிசைபாட
மிண்டி மிளிர்ந்த சடைகள் தாழ
விமல னாடுமே. ௧௦

சூடும் மதியஞ் சடைமே லுடையார்
சுழல்வார் திருநட்டம்
ஆடும் அரவம் அரையில் ஆர்த்த
அடிகள் அருளாலே
காடு மலிந்த கனல்வாய் எயிற்றுக்
காரைக் காற்பேய்தன்
பாடல் பத்தும் பாடி யாடப்
பாவ நாசமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



௧௦. குண்டை வயிற்று - சட்டி வயிற்று ; குழிவயிற்று எனினுமாம். பிறங்கல் - மலை. இண்டு - இண்டைக்கொடி ; ஈகை. எயிற்று - பல்லையுடைய. மிண்டி மிளிர்ந்த - நெருங்கிப் பிரகாசித்த.

௧௧. ஆர்த்த - அணிந்த.

# திரு இரட்டைமணிமாலை

திருச்சிற்றம்பலம்

கிளர்ந்துந்து வெந்துயர் வந்தடும்
போதஞ்சி நெஞ்சமென்பாய்
தளர்ந்திங் கிருத்தல் தவிர்திகண்
டாய்தள ராதுவந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத்
திடைவளர் கோட்டுவெள்ளை
இளந்திங் களுமெருக் கும்மிருக்
குஞ்சென்னி ஈசனுக்கே. க

ஈசன் அவனல்லா தில்லை எனநினைந்து
கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து - பேசி
மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்
பிறவாமைக் காக்கும் பிரான். உ

பிரானென்று தன்னைப்பன் னாள்பர
வித்தொழு வாரிடர்கண்
டிரானென்ன நிற்கின்ற ஈசன்கண்
டீர்இன வண்டுகிண்டிப்

---

க. கிளர்ந்து உந்து - எழுந்து தள்ளும். அடும்போது - வருத்தும்போது. நெஞ்சம் - மனமே. இங்கு - இப்பூமியில். வளர்ந்து உந்து - ஓங்கி எழுந்து பெருகி. கோட்டு...திங்களும் - பிறையும். ஈசனுக்கு - ஈசனை (உருபு மயக்கம்). வந்தி - வணங்கு. ஈசனை வந்தி என்றபடி.

ங. இனவண்டு - வண்டினங்கள்.

பொராநின்ற கொன்றைப் பொதும்பர்க்
கிடந்துபொம் மென்ருரைவாய்
அராநின் றிரைக்குஞ் சடைச்செம்பொன்
நீள்முடி அந்தணனே. ௩

அந்தணனைத் தஞ்சமென் ருட்பட்டார் ஆழாமே
வந்தணைந்து காத்தளிக்கும் வல்லாளன் -கொந்தணைந்த
பொன்கண்டாற் பூணுதே கோள்நாகம் பூண்டானே
என்கண்டாய் நெஞ்சே இனி. ௪

இனிவார் சடையினிற் கங்கையென்
பாளை அங் கத்திருந்த
கனிவாய் மலைமங்கை கண்ணில்என்
செய்திகை யிற்சிலையால்

---

௩. பொரா நின்ற - ஒன்ருேடொன்று போரிடும். கொன்றைப் பொதும்பர் - கொன்றைச் செறிவில் (சூழலில்). ஐவாய் அரா - ஐந்து வாயினையுடைய பாம்பு ; ஐந்துதலைப் பாம்பு (' அஞ்சு கொலாமவ ராடரவின்படம் '—அப்பர்). பொம் என்று நின்று இரைக்கும் - ' பொம் ' என்று நின்று சீறும் ; (பொம் - அநுகரண ஓசை).

௪. ஆழாமே - பிறவிக்கடலில் அழுந்தாதவாறு ; (' ஆழாமல் காப்பானை ' என்ருர் மணிவாசகனுர்). அளிக்கும் - அருளும். அணைந்த கொந்து பொன் - தானே வந்து சேர்ந்த திரண்ட பொன். (கொந்து பொன் - கொந்து வேலை செய்யப் பெற்ற பொன் எனினுமாம்). கோள் நாகம் - விடப் பாம்பு.

௫. வார் சடை - நீண்ட சடை. அங்கத்திருந்த - உடலின் பாதியாகவுள்ள. மலைமங்கை - பார்வதி. சிலையால் - மேரு வில்லால்.

முனிவார் திரிபுரம் மூன்றும்வெந்
　　தன்றுசெந் தீயின்மூழ்கத்
தனிவார் கணையொன்றி னால்மிகக்
　　கோத்தஎஞ் சங்கரனே. ரு

சங்கரனைத் தாழ்ந்த சடையானை அச்சடைமேற்
பொங்கரவம்வைத்துகந்தபுண்ணியனை-அங்கொருநாள்
ஆவாவென் ருழாமற் காப்பானை எப்போதும்
ஓவாது நெஞ்சே உரை. சு

உரைக்கப் படுவது மொன்றுண்டு
　　கேட்கிற்செவ் வான்தொடைமேல்
இரைக்கின்ற பாம்பினை என்றுந்
　　தொடேல்இழிந் தோட்டத்தெங்குந்
திரைக்கின்ற கங்கையும் தேனின்ற
　　கொன்றையும் செஞ்சடைமேல்
விரைக்கின்ற வன்னியும் சென்னித்
　　தலைவைத்த வேதியனே. எ

---

ரு. முனிவார் - பகைவர்தம். திரிபுரம் மூன்றும் - அங்கு மிங்குந் திரியும் தன்மைவாய்ந்த புரங்கள் மூன்றையும். தனிவார் கணை ஒன்றினால் - ஒப்பற்ற நீண்ட அம்பொன்றினால். என் செய்தி - என்ன செய்வாய். மலைமங்கை, கங்கை யென்பாளை இனிக் காணில் என் செய்தி என்று இயைக்க.

சு. அங்கு ஒரு நாள் - துன்பம் வரும் அந்த ஒரு நாள் (உயிர் பிரியும் நாள்). ஆ! ஆ! என்று. ஓவாது - நீங்காது (இடையறாது).

எ. இழிந்து ஓட்டத்து எங்கும் திரைக்கின்ற - இறங்கிப் பெருக்கெடுத்து எங்கணும் அலை மோதி வீசுகின்ற. விரைக்கின்ற - மணம் வீசுகின்ற. சென்னித்தலை - திருமுடியினிடத்தில். செவ்வான் தொடைமேல் - அந்திவான் பிறைமீது (பிறைச் சந்திரன்மீது). இரைக்கின்ற - சீறுகின்ற. உரைக்கப்படுவதும் ஒன்றுண்டு. அஃது எது? பாம்பினை என்றுந் தொடேல் என்பது. (பாம்பைக் கண்டால் தன்னைப் பற்றிக் கொள்ளுமென்று சந்திரன் அஞ்சுவன் என்பது மரபு. அத்தகைப் பாம்பு எற்றுக்கு என்றபடி.)

வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்
காதியனை ஆதிரைநன் னாளானைச் - சோதிப்பான்
வல்லேன மாய்ப்புக்கு மாலவனும் மாட்டாது
இல்லேன மாவென்றான் கீழ். அ

கீழா யினதுன்ப வெள்ளக்
கடற்றள்ளி உள்ளூறப்போய்
வீழா திருந்தின்பம் வேண்டுமென்
பீர்விர வார்புரங்கள்
பாழா யிடக்கண்ட கண்டனெண்
தோளன்பைம் பொற்கழலே
தாழா திறைஞ்சிப் பணிந்துபன்
னாளுந் தலைநின்மினே. கூ

---

அ. ஆதிரை நன்னாளானை - திருவாதிரை என்னும் திருநாளுக்குடையவனை ; -( ஓர் அடியவர் பொருட்டு மூங்கிலில் சிவபிரான் தோன்றிய நாள் திருவாதிரை என்று சொல்வது பௌராணிகம். ஆணவ இருளினின்றும் எழும் ஆன்மாக்களுக்கு ஒளி காட்டுதலைக் குறிக்கும் நாள் திருவாதிரை என்பது ஞானிகள் மரபு. அது தக்ஷிணாயனம் மறைந்து உத்தராயனம் தோன்றுதற்கு அறிகுறியாக இம்மண்ணுளார் திருவாதிரைத் திருவிழாக் கொண்டாடுகிறார்). வல் ஏனமாய் - வலிய பன்றியாகி. கீழ்புக்கு என்று கூட்டுக. மாட்டாது இல்லேன் அம்மா - முடியாமல் அறியகில்லேன் அம்மா என்றபடி.

கூ. கடல் தள்ளி-கடலைத் தள்ளி; நீந்தி. விரவார்-பகைவர்களின். புரங்கள்-திரிபுரம். கண்டன் - வீரன். பைம்பொன் - பசுமைப் பொன். தாழாது - காலந் தாழ்த்தாமல். இறைஞ்சிப் பணிந்து வணங்கித் தொண்டு செய்து. ( இறைஞ்சுதல் - வீழ்ந்து கிடத்தல் ; '...புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன '—கலித்தொகை : ங : கங ). தலைநின்மின் - தலைப்பட்டிருங்கள் ; அதே வேலையாயிருங்கள் என்றபடி.

தலையாய ஐந்தினையுஞ் சாதித்துத் தாழ்ந்து
கலையா யினஉணர்ந்தோர் காண்பர் - தலையாய
அண்டத்தான் ஆதிரையான் ஆலாலம் உண்டிருண்ட
கண்டத்தான் செம்பொற் கழல். ௧௦

கழற்கொண்ட சேவடி காண லுற்
றார்தம்மைப் பேண லுற்றார்
நிழற்கண்ட போழ்தத்து நில்லா
வினைநிக ரேதுமின்றித்
தழற்கொண்ட சோதிச்செம் மேனிஎம்
மானைக்கைம் மாமலர்தூய்த்
தொழக்கண்டு நிற்கிற்கு மோதுன்னி
நம்மடுந் தொல்வினையே. ௧௧

---

௧௦. தலையாய ஐந்தினையும் சாதித்து - எல்லா மந்திரங்களிலும் தலைமை பெற்றதாகிய திருவைந்தெழுத்தை ஓதிச் சாதனை செய்து என்பது ஒன்று ; கொல்லாமை, களவாடாமை, கள்ளாமை, வெஃகாமை, பொய்யாமை என்னும் தலையாய ஐந்தறங்களையுஞ் செய்து என்பது மற்றொன்று ; சுத்திகளில் தலையாய பஞ்சசுத்தியைக் கூறல் வேறொன்று. தலையாய அண்டத்தான் - எல்லா உலகங்கட்கும் மேம்பட்ட உலகத்திருப்பவன் (தத்துவ புவனங்களைக் கடந்தவன் என்றபடி).

௧௧. கழற்கொண்ட சேவடி காணலுற்றவரே தம்மைப் பேண (காத்த)லுற்றவரென்க ; ஏனையோர் தம்மைப் பேணாது கேடு செய்து கொள்வோர் என்க ; காணலுற்ற அடியவர் தம்மைப் பேண (வழிபட)லுற்றவர் என்று கொள்ளினும் பொருந்தும் ; அடியார்க் கடியவர் என்றவாறு. கழல் - வீரக் கழல். நிழல் கண்டபோழ்து அத்து - நீழலைக் கண்டவிடத்தே. துன்னி - நெருங்கி. நம் அடும் - நம்மை வருத்தும்.

தொல்லை வினைவந்து சூழாமுன் தாழாமே
ஒல்லை வணங்கி உமையென்னும் - மெல்லியலோர்
கூற்றானைக் கூற்றுருவங் காய்ந்தானை வாய்ந்திலங்கு
நீற்றானை நெஞ்சே நினை. கஉ

நினையா தொழுதிகண் டாய்நெஞ்ச
மேஇங்கொர் தஞ்சமென்று
மனையா ளையுமக்கள் தம்மையுந்
தேறியோ ராறுபுக்கு
நனையாச் சடைமுடி நம்பன்நந்
தாதைநொந் தாதசெந்தீ
அனையான் அமரர்பிரான் அண்ட
வாணன் அடித்தலமே. கங

அடித்தலத்தால் அன்றரக்கன் ஐஞ்ஞான்கு தோளும்
முடித்தலமும் நீமுரித்த வாறென் - முடித்தலத்தில்

---

கஉ. தொல்லைவினை - பழவினை. தாழாமே - காலந்தாழ்த்தாது. ஒல்லை - சீக்கிரம். ஓர் கூற்றானை - ஒரு பாகத்திலுடையவனை. கூற்று உருவம் காய்ந்தானை - யமனைச் சினந்து வீழ்த்தியவனை.

கங. நினையா தொழுதி - நினைந்து வணங்கு. தேறி - அநித்திய மென்று தெளிந்து; (தேறி என்பதைத் தேறு என்னும் பகுதியினடியாகப் பிறந்த விகாரப்பட்ட முன்னிலை வினைமுற்றாகக் கொண்டு, அதற்கு நீக்கு என்று பொருளுரைப் போருமுளர்.) ஓராறு - கங்கை. நொந்தாத - அழியாத.

கச. அரக்கன் - இராவணன். ஐ நான்கு - இருபது. முடி தலமும் - முடிகளையும். முடிதலத்தில் - திருமுடியில். ஆறு ஆடி -

ஆறாடி ஆறா அனலாடி அவ்வனலின்
நீறாடி நெய்யாடி நீ. ௧௪

நீநின்று தானவர் மாமதில்
மூன்றும் நிரந்துடனே
தீநின்று வேவச் சிலைதொட்ட
வாறென் திரங்குவல்வாய்ப்
பேய்நின்று பாடப் பெருங்கா
டரங்கா பெயர்ந்து நட்டம்
போய்நின்று பூதந் தொழச்செய்யும்
மொய்கழற் புண்ணியனே. ௧௫

புண்ணியங்கள்செய்தனவும்பொய்ந்நெறிக்கட்சாராமே
எண்ணியோ ரைந்தும் இயந்தனவால் - திண்ணிய
கைம்மாவி னீருரிவை மூவுருவும் போர்த்துகந்த
அம்மானுக் காட்பட்ட அன்பு. ௧௬

---

கங்கையாடி. ஆறா அனல் ஆடி - தணியாத தீயாடி. அவ்வனலின் நீறு ஆடி - அத்தீயினின்றும் பூக்கும் திருநீறாடி (திருநீறு சண்ணித்தவன்). நீ, நீ - வீரங்குறித்தற்பொருட்டு இருமுறை.

௧௫. தானவர் - அரக்கர். நிரந்து உடனே - முறையே குலைந்து உடனே. சிலை தொட்ட ஆறு என் - வில்லில் அம்பு பூட்டிய விதம் என்ன? திரங்கு - சுருண்ட. பெருங்காடு - சுடுகாடு. அரங்கா - சபையாக. பெயர்ந்து நட்டம் செய்யும்.

௧௬. ஓர் ஐந்தும் - ஐம்புலன்களும். இயைந்தன - பொருந்தின. திண்ணிய கைம்மாவின் ஈர் உரிவை - வலிய யானையின் தோலை. மூவுருவும் - உமை முருகன் தான் என்னும் மூவுருவமும் (சோமாஸ்கந்தம்). ஆண்டவன் திருவடி அன்புக்கென்று புலன்கள் பொருந்தின என்க.

அன்பால் அடைவதெவ் வாறுகொல்
மேலதோ ராடரவம்
தன்பால் ஒருவரைச் சாரவொட்
டாதது வேயுமன்றி
முன்பா யினதலை யோடுகள்
கோத்தவை யார்த்துவெள்ளை
என்பா யினவும் அணிந்தங்கோர்
ஏறுகந் தேறுவதே. கஎ

ஏறலால் ஏறமற் றில்லையே எம்பெருமான்
ஆறெலாம் பாயும் அவிர்சடையார் - வேறோர்
படங்குலவு நாகமுமிழ் பண்டமரர் சூழ்ந்த
தடங்கடல்நஞ் சுண்டார் தமக்கு. கஅ

தமக்கென்றும் இன்பணி செய்திருப்
பேமுக்குத் தாமொருநாள்
எமக்கொன்று சொன்னால் அருளாங்கொ
லாம்இணை யாதுமின்றிச்

---

கஎ. ஆடு அரவம் - ஆடும் பாம்பு. தலையோடுகள் ஆர்த்துக் கோத்தவை முன்னே யிருக்கின்றன ; ஆர்த்தல் - பொருத்தல் ; நிறைத்தல். ஏறு - எருது. பாம்பு, தலையோடுகள், என்புமாலை, ஏறு இவை ஒருவரைச் சாரவொட்டாமல் தடுக்கின்றன என்க.

கஅ. குலவு - வளைந்த; விளங்கும், தங்கும் எனினுமாம். பண்டு - முன்னாளில். உமிழ் நஞ்சு. ஏறு அல்லால் - எருது அல்லாமல்.

ககூ. என்றும் - எந்நாளும். செய்திருப்பேமுக்கு - செய்திருக்கும் எங்களுக்கு. ஒன்று - ஒரு மொழி. அருளாங்கொலாம் - அருளாகி

சுமக்கின்ற பிள்ளைவெள் ளேறொப்ப
தொன்றுதொண் டைக்கனிவாய்
உமைக்கென்று தேடப் பொறுதுட
னேகொண்ட உத்தமரே. கசு

ஊத்தமராய் வாழா துலந்தக்கால் உற்றார்கள்
செத்த மரமடுக்கித் தீயாமுன் - உத்தமனாய்
நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி தன்திறமே
கேளாழி நெஞ்சே கிளர்ந்து. உ0

திருச்சிற்றம்பலம்



---

விடுமோ ? (இறைவன் மௌனி. அவன் உணர்த்தும் ஒருமொழியே (சொல்லாத வார்த்தை) திருவருட் பேற்றுக்கு இலக்காக்குவது. ஒன்று சொன்னால் அது திருவருளாகுமென்று பேசாதிருக்கின்றனையோ என்றபடி. ஒரு மொழியின் உயர்வு கூறியவாறும்.) இணை - ஒப்பு. தொண்டைக் கனி - கொவ்வைக் கனி. தம்மைச் சுமக்கின்ற வெள்ளேறு போன்றதொன்றை உமைக்காகத் தேடப் பொறுமையின்றித் தாமே உமையைத் தம்முடன் ஒரு பாகத்தில் வைத்துக்கொண்ட உத்தமர் என்றபடி.

உ0. உலந்தக்கால் - இறந்தகாலை. செத்தமரம் - உலர்ந்த மரம்; விறகு. தீயா முன் - கொளுத்தா முன்னர். நீள் ஆழி - நெடுங்கடல். ஆழி நெஞ்சே நெய்யாடி தன் திறமே கிளர்ந்து கேள். ஆழி நெஞ்சே- ஆழ்ந்த மனமே. கிளர்ந்து - விரைந்து எழுந்து. ‘ உத்தமராய் வாழ்வார் உலந்தக்கால் ’ என்பதும் பாடம்.

# அற்புதத் திருவந்தாதி

திருச்சிற்றம்பலம்

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் - நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர். க

இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படருநெறிபணியா ரேனுஞ் - சுடருருவில்
என்பறாக் கோலத் தெரியாடும் எம்மானார்க்(கு)
அன்பறா தென்னெஞ் சவர்க்கு. உ

அவர்க்கே எழுபிறப்பும் ஆளாவோம் என்றும்
அவர்க்கேநாம் அன்பாவ தல்லாற் - பவர்ச்சடைமேற்
பாகாப்போழ் சூடு மவர்க்கல்லான் மற்றொருவர்க்
காகாப்போம் எஞ்ஞான்றும் ஆள். ௩

---

க. நிறம் - ஒளி; வண்ணம். மைஞான்ற - கருமை தங்கிய (ஞாலல் - தொங்குதல்).

உ. படரும் நெறி பணியாரேனும் - பற்றிச் செல்லும் நெறி இஃதெனப் பணித்தருளாவிட்டாலும். என்பு அறா - என்பு மாலை நீங்காத. எம்மானார்க்கு, அவர்க்கு - 'எரியாடும் எம்மானார்க்கே' என்பதை வலியுறுத்த வேண்டி இருமுறை குறிப்பிட்டவாறும்.

௩. பவர்சடை - நெருங்குதலையுடைய சடை. பாகா போழ் - பாதியல்லாத பிளவை; அதாவது இளம்பிறைச் சந்திரனை.

ஆளானேம் அல்லல் அறிய முறையிட்டாற்
கேளாத தென்கொலோ கேளாமை - நீளாகஞ்
செம்மையா னாகித் திருமிடறு மற்றொன்றாம்
எம்மையாட் கொண்ட இறை. ௪

இறைவனே எவ்வுயிருந் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே ஈண்டிறக்கஞ் செய்வான் - இறைவனே
எந்தாய் எனஇரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான். ௫

வானத்தான் என்பாரும் என்கமற் றும்பர்கோன்
தானத்தான் என்பாருந் தாமென்க - ஞானத்தால்[ன்
முன்நஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தா
என்நெஞ்சத் தானென்பன் யான். ௬

யானே தவமுடையேன் என்நெஞ்சே நன்னெஞ்சம்
யானே பிறப்பறுப்பான் எண்ணினேன் - யானேஅக்

---

௪. கேளாமை - கேளாமைக்குக் காரணம். நீள் ஆகம் செம்மையான் ஆகி - நெடிய திருமேனி செந்நிறமுடையனாகி. திருமிடறு மற்று ஒன்று ஆம் - திருமிடறு (கண்டம்) மற்றொரு (கரு) நிறமாயிருப்பதாகும். ஒன்று செந்நிறமாகவும் மற்றொன்று கருநிறமாகவும் இருப்பது காரணம் என்றவாறு. கருமை குற்றமுடையதாதலின் என்க.

௫. இறக்கம் - சம்மாரம்; அழித்தல்.

௬. உம்பர் - தேவர். உம்பர்கோன் என்பதற்குச் சிவபிரான் என்று பொருள்கொண்டு, உம்பர்கோன் வானத்தான் (விண்ணகத்தான்) என்றும், தானத்தான் (விண்ணுக்கு வேறாகிய மண்ணகத்தான்) என்றும் பொருள் கொண்டனர் ஆறுமுகத்தம்பிரானார். முன் நஞ்சத்தால் - முன்னே உண்ட விடத்தால். ஞானிகள் நெஞ்சமே ஆண்டவனிடம் என்றபடி.

கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற
அம்மானுக் காளாயி னேன். எ

ஆயினேன் ஆள்வானுக் கன்றே பெறற்கரியன்
ஆயினேன் அஃதன்றே ஆமாறு - தூய
புனற்கங்கை ஏற்றானோர் பொன்வரையே போல்வான்
அனற்கங்கை ஏற்றான் அருள். அ

அருளே உலகெலாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானல் - அருளாலே [றும்
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்
எப்பொருளும் ஆவ தெனக்கு. கூ

எனக்கினிய எம்மானை ஈசனையான் என்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன் - எனக்கவனைக்

---

எ. கைம்மா உரி - யானைத் தோல். கண்ணுதலான் - நெற்றியிற் கண்ணுடையான். வெண்மை நீற்ற அம்மானுக்கு - வெள்ளிய திருநீற்றை அணிந்த சிவபெருமானுக்கு.

அ. ஆள்வானுக்கு ஆயினேன் - சிவபெருமானுக்கு ஆளானேன். அன்றே - ஆளான அன்றே. பெறற்கு அரியன் ஆயினேன் - பெறுதற்கு ஒன்றுமில்லாதவனாயினேன்; ('அன்றுந் திருவுருவம்.........' என்னும் பாட்டைப் பார்க்க); பெறுதற்கு அரிய பேறுடையனானேன் என்போருமுளர். ஓர் பொன்வரையே போல்வான் - ஒரு மகா மேருகிரியை ஒத்தவன். அனல் கம் கை ஏற்றான் - நெருப்பையும் கபாலத்தையும் கையில் ஏற்றவன்.

கூ. (ஈசன் அருளே - ஈசன் அருளே - ஈசன் அருளால்) எப்பொருளும் எனக்கு ஆவது என்றபடி. எல்லாவற்றையுந் திருவருட் கண்கொண்டு நோக்குவோர்க்கு எல்லாம் ஆவனவேயாகும். அவர்கட்கு ஆகாதது ஒன்றுமில்லை.

கo. மனத்துக்கு, இனிய வைப்பாக (சேம நிதியாக).

கொண்டேன் பிரானுகக் கொள்வதுமே இன்புற்றேன்
உண்டே எனக்கரிய தொன்று. ௧௦

ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்தேன்
ஒன்றேஎன் உள்ளத்தினுள்ளடைந்தேன்-ஒன்றேகாண்
கங்கையான் திங்கட் கதிர்முடியான் பொங்கெரிசேர்
அங்கையாற் காளாம் அது. ௧௧

அதுவே பிரானுமா றுட்கொள்ளு மாறும்
அதுவே இனியறிந்தோ மானுல் - அதுவே
பனிக்கணங்கு கண்ணியார் ஒண்ணுதலின் மேலோர்
தனிக்கணங்கு வைத்தார் தகவு. ௧௨

தகவுடையார் தாமுளரேல் தாரகலஞ் சாரப்
புகவிடுதல் பொல்லாது கண்டீர் - மிகவடர
ஊர்ந்திடுமா நாகம் ஒருநாள் மலைமகளைச்
சார்ந்திடுமேல் ஏபாவந் தான். ௧௩

---

௧௦. உண்டே - உண்டோ.

௧௧. ஒன்று, சிவபெருமானுக்கு ஆளாவது என்றபடி. 'என்னுள்ளத்தி னுள்ளடைத்தேன்' என்பதும் பாடம்.

௧௨. பிரானுமாறும் அதுவே என்றும், ஆட்கொள்ளுமாறும் அதுவே என்றும் இனியறிந்தோமானுல் என்று கூட்டுக. பனிக்கு அணங்கு கண்ணியார் - கங்கை நதியின் குளிர்ச்சிக்கு நடுக்குறும் கொன்றை மாலை யணிந்தவர். ஒண் நுதலின்மேல் - அழகிய நெற்றியின்மேல். ஓர் தனிக்கண் - ஓர் ஒப்பற்ற கண்ணை. தகவு அதுவே என்று சேர்க்க. தகவு - தகைமை.

௧௩. தகவுடையார்தாம் உளரேல் - தகைமையுடையவராகத் தேவரீர் இருப்பீரேல். (நாகம்) தார் அகலம் சார - பாம்பினை மாலையாக மார்பில் பொருந்த. அந்நாகம் என்றைக்காதல் ஒருநாள் மலைமகளைச் சார்ந்திடுமாதலால் என்க. பாவம் - பழி.

தானே தனிநெஞ்சந் தன்னை உயக்கொள்வான்
தானே பெருஞ்சேமஞ் செய்யுமால் - தானேயோர்
பூணாகத் தாற்பொலிந்து பொங்கழல்சேர் நஞ்சுமிழும்
நீணாகத் தானை நினைந்து. கச

நினைந்திருந்து வானவர்கள் நீள்மலராற் பாதம்
புனைந்தும் அடிபொருந்த மாட்டார் — நினைந்திருந்து
மின்செய்வான் செஞ்சடையாய் வேதியனே என்கின்றேற்(கு)
என்செய்வான் கொல்லோ இனி. கரு

இனியோநாம் உய்ந்தோம் இறைவன் தாள்சேர்ந்தோம்
இனியோ ரிடரில்லோம் நெஞ்சே - இனியோர்
வினைக்கடலை ஆக்குவிக்கும் மீளாப் பிறவிக்
கனைக்கடலை நீந்தினோம் காண். கசூ

காண்பார்க்குங் காணலாந் தன்மையனே கைதொழுது
காண்பார்க்குங் காணலாம் காதலாற்-காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே தொல்லுலகுக்(கு)
ஆதியாய் நின்ற அரன். கஎ

---

கச. சேமம் - காப்பு; நலனுமாம். பூண் - அணி. ஆகத்தால்- மார்பால். நீண் நாகத்தானை - நீண்ட பாம்பணிந்த பரமசிவனை.

கரு. புனைந்தும் - அலங்கரித்தும்; சூடியும். மின் - ஒளி. வான் - மேலான.

கசூ. கனை - ஒலித்தலையுடைய.

கஎ. காண்பார்க்கும் - யோகியர்க்கும். கைதொழுது காண்பார்க்கும் - கைத்திருத் தொண்டர்க்கும். காதலால் காண்பார்க்குச் சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுதலிலுள்ள சிறப்பு உன்னற்பாலது. காதல் நோக்குச் சிறந்தது என்றபடி.

அரனென்கோ நான்முகன் என்கோ அரியாம்
பரனென்கோ பண்புணர மாட்டேன் - முரணழியத்
தானவனைப் பாதத் தனிவிரலாற் செற்றானை
யானவனை எம்மானை இன்று. கஅ

இன்று நமக்கெளிதே மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை - என்றுமோர்
மூவா மதியானை மூவே ழுலகங்கள்
ஆவானைக் காணும் அறிவு. கசு

அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளுந் தானே அவன். உ0

அவனே இருசுடர்தீ ஆகாச மாவான்
அவனே புவிபுனல்காற் றாவான் - அவனே
இயமான னாயட்ட மூர்த்தியுமாய் ஞான
மயமாகி நின்றானும் வந்து. உக

---

கஅ. முரண் - வலிமை. தானவனை - அரக்கனாகிய இராவணனை. செற்றானை - ஒடுக்கினவனை. பண்பு - இயல்பு.

கசு. மூவா - முதுமை எய்தாத; என்றும் ஓரியல்பாகவுள்ள. காணும் அறிவு எளிதே என்க.

உ0. விரிசுடர் - சூரியன் சந்திரன். பார் ஆகாயம் - பார் முதல் ஆகாயம் வரை; (நிலம் நீர் நெருப்பு காற்று வான்.)

உக. இஃது இருபதாம் பாட்டின் விளக்கம். இயமானனாய் - ஆன்மாவாய். அட்ட மூர்த்தங் குறிப்பிட்டவாறு காண்க; (மண், புனல், தீ, வளி, வெளி, ஞாயிறு, திங்கள், உயிர்.) ஞானமயமாகி வந்து நின்றானும் அவனே என்க.

வந்திதனைக் கொள்வதே யொக்குமிவ் வாளரவின்
சிந்தை யதுதெரிந்து காண்மினோ - வந்தோர்
இராநீ ரிருண்டனைய கண்டத்தீர் எங்கள்
பிரானீர்உம் சென்னிப் பிறை. உஉ

பிறையும் புனலும் அனலரவுஞ் சூடும்
இறைவர் எமக்கிரங்கா ரேனும் - கறைமிடற்ற
எந்தையார்க் காட்பட்டேம்என் றென்றிருக்குமே
எந்தையரு உள்ளம் இது. உஙு

இதுவன்றே ஈசன் திருவுருவம் ஆமா(று)
இதுவன்றே என்றனக்கோர் சேமம் - இதுவன்றே
மின்னுஞ் சுடருருவாய் மீண்டாயென் சிந்தனைக்கே
இன்னுஞ் சுழல்கின்ற திங்கு. உச

---

உஉ. இராநீர் - மேகம். (நீர் இருளல் - மேகமாதல்; கார்மேகம்.) எங்கள் பிரான்நீர். உம் சென்னிப் பிறையைக் கொள்வதுபோல், இவ்வாளரவின் சிந்தை இருக்கும். அதனைத் தெரிந்து காண்மின் என்றவாறு.

உஙு. பிறை - பிறைச் சந்திரன். புனல் - கங்கை. அனல் அரவு - நஞ்சுத்தீயுமிழும் பாம்பு. ஆண்டவன் அருள் செய்யாதொழியினும் எம்மனம் அவனிடங்கொண்ட அன்பினினின்றும் நீங்காது என்றபடி.

உச. மீண்டாய் - மறைந்தாய்; ('பேதைமைமீளச் செய்கை மீளும் - செய்கைமீள உணர்ச்சிமீளும்.........வேட்கைமீளப் பற்று மீளும்.........'—மணிமேகலை: ஙO: ககக.) என் சிந்தனைக்கே இன்னுஞ் சுழல்கின்றது - (தோன்றி மறைந்த மின்னுஞ்சுடர் உருவம்) இன்னும் என் சிந்தனையில் சுழன்று கொண்டிருக்கிறது. ஈசன் திருவுருவம் ஆமாறு இது அன்றோ. (சுடர் உருவம் ஈசன் உருவம் என்று தெரிவித்தவாறு காண்க.) சேமம் - நலன்; புதையல் என்னலுமாம்.

இங்கிருந்து சொல்லுவதென் எம்பெருமான் எண்ணுதே
எங்கும் பலிதிரியும் எத்திறமும் - பொங்கிரவில்
ஈமவனத் தாடுவதும் என்னுக்கென் றுராய்வோம்
நாமவனைக் காண லுற்ற ஞான்று. உரு

ஞான்ற குழற்சடைகள் பொன்வரைமேல் மின்னுவன
போன்ற கறைமிடற்றுன் பொன்மார்பின் - ஞான்றெங்கு
மிக்கயலே தோன்ற விளங்கி மிளிருமே
அக்கயலே வைத்த அரவு. உசு

---

உரு. எண்ணுதே - ஒன்றும் எண்ணமலே. பலிதிரியும் - பிச்சையேற்கும். எத்திறமும் - எவ்வியல்பும் : எவ்வகையுமாம். ஈமவனத்து - சுடுகாட்டில். என்னுக்கு - என்னத்திற்கு. எம்பெருமான் பலிதிரிதல், ஈமவனத்தாடுதல் முதலியவற்றின் நுட்பத்தை அவனைக் காணுது இங்கிருந்துகொண்டு என்ன சொல்வது? அவனைக் காணலுற்ற ஞான்று அவைகளை ஆராய்வோம் என்றபடி. சிவபெருமான் ஒன்றும் எண்ணுது பலிதிரிதல் ஈமத்தாடுதல் முதலியன, ஆணவம் முதலிய மலங்களால் கட்டுண்ட நிலையில் உயிர்கட்கு விளங்காவென்க. அவைகளின் நுட்பம் மலம் நீங்கித் திருவருள் ஞானங் கைவரப் பெறும்போது விளங்கும் என்க. எண்ணுதே பலிதிரிதல் என்பது கருதற்பாலது. ஆண்டவன் உயிர்கள்மாட்டு வைத்துள்ளது இரக்கம் என்று குறிப்பிட்டவாறும். இறைமைக் குணத்துக்குச் செல்வப் பொருள் வேண்டுவதில்லை என்பதும் விளங்குகிறது. இறைவன் பொங்கிரவில் ஈமவனத்தாடுவதன் தத்துவம், உயிர்கள் ஆணவவிருளில் மூழ்கித் தங்கள் நிலை தெரியாது கிடக்கும்போதும், அவைகளைவிட்டு இறைவன் பிரியாது, அவைகளைச் செந்நெறிப்படுத்தி இயக்கவேண்டி, அவ்விருளில் ஒளியாய் நின்று ஆடுகின்றுன் என்பது. விளக்கம் ஞான நூல்களிற் காண்க.

உசு. ஞான்ற குழல் சடைகள் - தொங்கிய சுருள் சடைகள். ஞான்று - தொங்கி. மிக்கு அயலே - மிகுந்த அழலே. அக்கு அயலே வைத்த அரவு - என்பு மாலையின் அருகே வைத்த பாம்பு. அரவு பொன் மார்பில் மிளிரும்.

அரவமொன் ருகத்து நீங்கயந்து பூணேல்
பரவித் தொழுதிரந்தோம் பன்னாள் - முரணழிய
ஒன்னார்தம் மூவெயிலும் ஓரம்பால் எய்தானே
பொன்னாரம் மற்றொன் று பூண். உஎ

பூணாக ஒன் று புனைந்தொன் று பொங்கதளின்
நாணாக மேன்மிளிர நன்கமைத்துக் - கோணாகம்
பொன்முடிமேற் சூடுவது மெல்லாம் பொறியிலியேற்
கென்முடிவ தாக இவர். உஅ

இவரைப் பொருளுணர மாட்டாதா ரெல்லாம்
இவரை இகழ்வதே கண்டீர் - இவர்தமது
பூக்கோல மேனிப் பொடிபூசி என்பணிந்த
பேய்க்கோலங் கண்டார் பிறர். உகூ

பிறரறிய லாகாப் பெருமையருந் தாமே
பிறரறியும் பேருணர்வுந் தாமே - பிறருடைய

---

உஎ. ஆகத்து - திருமேனியில். முரண் - வலி. ஒன்னார்தம் - பகைவருடைய. திருமேனியில் பாம்பை அணியற்க என்றும், பொன்னாரம் அணிக என்றும் வேண்டுதல் செய்தவாறு காண்க.

உஅ. ஒன்று பூணாக - ஒரு பாம்பை ஆபரணமாக. ஒன்று - மற்றொரு பாம்பை. அதளின் நாணாக - புலித்தோலின்மீது அரை ஞாணாக. கோள் நாகம் - இன்னொரு விடப்பாம்பை. பொறியிலியேற்கு - அறிவிலியாகிய எனக்கு. என் முடிவதாக - என்ன விளைவித்தற்பொருட்டு. இவர் (சிவபெருமான்) புனைந்து, அமைத்து, சூடுவதுமெல்லாம் என்றியைக்க.

உகூ. பொருள் - உண்மை; தத்துவம். பூக்கோல மேனி - தாமரைப் பூவைப்போன்ற செந்தழல் மேனியில். பொடி - திருநீறு. பேய்க்கோலத்தின் நுண்பொரு ளுணராதார் இகழ்வரென்று கூறிய வாறு காண்க.

ங௦. பிறர் - தத்துவச்சேட்டைக ளுடையவர். பிறர் - தத்துவச் சேட்டைக ளொடுங்கப் பெற்றவர். பிறருடைய என்பு -

என்பே யணிந்திரவில் தீயாடும் எம்மானார்
வன்பேயுந் தாமும் மகிழ்ந்து. ௩௦

மகிழ்தி மடநெஞ்சே மானுடரில் நீயும்
திகழ்தி பெருஞ்சேமஞ் சேர்ந்தாய் - இகழாதே
யாரென்பே யேனும் அணிந்துழல்வார்க் காட்பட்ட
பேரன்பே இன்னும் பெருக்கு. ௩௧

பெருகொளிய செஞ்சடைமேற் பிள்ளைப் பிறையின்
ஒருகதிரே போந்தொழுகிற் றொக்கும் - தெரியின்
முதற்கண்ணான் முப்புரங்கள் அன்றெரித்தான் மூவா
நுதற்கண்ணான் தன்மார்பின் நூல். ௩௨

நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக
நீல மணிமிடற்றான் நீர்மையே - மேலுலகத்(து)
எக்கோலத் தெவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத் தவ்வுருவே யாம். ௩௩

---

இறந்தவர்தம் என்பு (தாம் இறவாதாராகலின்). வன்மை பேயும் - வலிய பேயும்.

௩௧. மகிழ்தி - மகிழ்வெய்துவாயாக. மானுடரில் நீயும் திகழ்தி- மனிதர்களில் நீயும் விளங்குவாயாக. (ஆண்டவனிடத்து அன்பு வாய்ந்த நெஞ்சுடையாரே மனிதர்களில் மனிதராகத் திகழ்வோராவர் என்றபடி.) சேமம் - செல்வம் ; நலம். யார் என்பேயேனும் - இறந்த எவரென்பே யானாலும்.

௩௨. தெரியின் - ஆராய்ந்து பார்த்தால். முதற் கண்ணான் - முதலிலிருப்பவன். மூவா நுதல் கண்ணான் - அழியாத நெற்றிக் கண்ணன். நூல், பிள்ளைப் பிறையின் ஒரு கதிரே (கிரணமே) போந்து ஒழுகியது ஒக்கும்.

௩௩. நீர்மை - தன்மை. நுழைவு இலாதார் - மெய்யறிவு நுழைவில்லாதார்.

ஆமா றறியாவே வல்வினைகள் அந்தரத்தே
நாமாளென் றேத்தார் நகர்மூன் றும் - வேமா(று)
ஒருகணையாற் செற்றானை உள்ளத்தால் உள்ளி
அருகணையா தாரை அடும். ௩௪

அடுங்கண்டாய் வெண்மதியென் றஞ்சி இருள்போந்
திடங்கொண் டிருக்கின்ற தொக்கும் - படங்கொள்
அணிமிடற்ற பேழ்வாய் அரவசைத்தான் கோல
மணிமிடற்றி னுள்ள மறு. ௩௫

மறுவுடைய கண்டத்தீர் வார்சடைமேல் நாகம்
தெறுமென்று தேய்ந்துழலும் ஆஆ - உறுவான்
தளரமீ தோடுமேல் தானதனை யஞ்சி
வளருமோ பிள்ளை மதி. ௩௬

---

௩௪. அந்தரத்தே - ஆகாயத்திலே. நாம் ஆள் - நாம் (சிவ பிரானுக்கு) அடியேம். வேமாறு - வேகும்படி. வல்வினைகள் அடும் - வலிய வினைகள் துன்புறுத்தும். ஆம் ஆறு அறியாவே - என்ன விளையும் என்பதை அவை அறியமாட்டா. வினைகள் முன்பின் சிந்தியாது தங்கள் கடன்களை ஆற்றும் என்றபடி.

௩௫. வெண்மதி அடும் என்று அஞ்சி. அடும் - அழிக்கும். அணிமிடற்ற பேழ்வாய் அரவு - அழகிய தொண்டையையும் பிளந்த வாயையும் உடைய பாம்பு. கோல மணி மிடற்றில் - அழகிய நீலமணி யொத்த கண்டத்தில். மறு ஒக்கும் என்று கூட்டுக.

௩௬. தெறும் என்று - வருத்தும் என்று. பிள்ளை மதி தேய்ந்து உழலும். (நாகம்) உறுவான் - அந்நாகம் தன்னை வருத்தும்பொருட்டு. அந்நாகம் தான் தளரத் தன்மீது ஓடுமேல், தான் அதற்கு அஞ்சிப் பிள்ளை மதி வளருமோ என்று கொள்க.

மதியா அடலவுணர் மாமதில்மூன் றட்ட
மதியார் வளர்சடையி னானை - மதியாலே
என்பாக்கை யாலிகழா தேத்துவரேல் இவ்வுலகில்
என்பாக்கை யாய்ப்பிறவார் ஈண்டு. ௩௭

ஈண்டொளிசேர் வானத் தெழுமதியை வாளரவந்
தீண்டச் சிறுகியதே போலதே - பூண்டதோர்
தாரேறு பாம்புடையான் மார்பில் தழைத்திலங்கு
கூரேறு காரேனக் கொம்பு. ௩௮

கொம்பினையோர் பாகத்துக் கொண்ட குழகன்றன்
அம்பவள மேனி அதுமுன்னஞ் - செம்பொன்
அணிவரையே போலும் பொடியணிந்தால் வெள்ளி
மணிவரையே போலும் மறித்து. ௩௯

---

௩௭. அடல் அவுணர் - வலிய அரக்கர். அட்ட - அழித்த. மதி ஆர் - சந்திரன் நிலவும். மதியாலே - அறிவாலே. என்பு யாக்கையால் இகழாது - என்பு மாலை அணிந்த ஒரு மேனியன் என்பதால் இகழாமல்; என்பினால் யாக்கப்பட்டுள்ள உடல் கொண்டு சிவபிரானை இகழாமல் இவ்வுலகில் வழிபடுவோராயின் என்று கொள்ளலுமாம். என்பு யாக்கை கொண்டு இங்கே பிறவார்.

௩௮. தார் - மாலை; கொன்றைமாலை. ஏனக்கொம்பு - பன்றிக் கொம்பு. ஏனக்கொம்பு, சந்திரனைப் பாம்பு தீண்டச் சிறுகியது போலதே என்றபடி.

௩௯. கொம்பினை - பார்வதி தேவியாரை. குழகன் தன் - சிவபிரானுடைய. அம் - அழகிய. அணிவரை - அழகிய மேருமலை. மணி வெள்ளிவரை - அழகிய கயிலைமலை. மறித்துப் பொடி யணிந்தால் என்று கூட்டுக. மறித்து - மீண்டு.

மறித்து மடநெஞ்சே வாயாலுஞ் சொல்லிக்
குறித்துத் தொழுதொண்டர் பாதம் - குறித்தொருவர்
கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்மாட்(டு)
உள்ளாதார் கூட்டம் ஒருவு. ௪௦

ஒருபால் உலகளந்த மாலவனும் மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால் - இருபாலும்
நின்னுருவ மாக நிறந்தெரிய மாட்டோமால்
நின்னுருவம் மின்னுருவோ நேர்ந்து. ௪௧

நேர்ந்தரவங் கொள்ளச் சிறுகிற்றே நீஅதனை
ஈர்ந்தளவே கொண்டிசைய வைத்தாயோ - பேர்ந்து
வளங்குழவித் தாய்வளர மாட்டாதோ என்னோ
இளங்குழவித் திங்கள் இது. ௪௨

திங்க ளிதுசூடிச் சில்பலிக்கென் றூர்திரியேல்
எங்கள் பெருமானே என்றிரந்து - பொங்கொளிய
வானோர் விலக்காரேல் யாம்விலக்க வல்லமே
தானே அறிவான் தனக்கு. ௪௩

---

௪௦. மட நெஞ்சே! தொண்டர் பாதம் வாயாலுஞ் சொல்லிக் குறித்துத் தொழு. ஒருவர் - ஒருவரும். திங்கள் குறுங்கண்ணி கொண்டார் - பிறையாகிய மாலையைச் சூடிய சிவபெருமான். உள்ளாதார் - நினையாதார். ஒருவு - விட்டு நீங்கு (அடியார் உறவு கொள் என்றபடி).

௪௧. இருபாலும் நீல உருவமாக நேர்ந்து (நெருங்கி) நிறந்தெரிய மாட்டோம். இரண்டு நீலமேக உருவிடைத் தோன்றும் மின்னுருவோ உன்னுடையது என்றபடி. இறைவன் மின்னுருவம் உடையவன் என்றவாறு.

௪௨. ஈர்ந்து - பிளந்து. குழவித்தாய் - குழவித்தன்மைய தாய்.
௪௩. சில்பலி - பிச்சை.

தனக்கே அடியனாய்த் தன்னடைந்து வாழும்
எனக்கே அருளாவா றென்கொல் - மனக்கினிய
சீராளன் கங்கை மணவாளன் செம்மேனிப்
பேராளன் வானோர் பிரான். சச

பிரானவனை நோக்கும் பெருநெறியே பேணிப்
பிரானவன்றன் பேரருளே வேண்டிப் - பிரானவனை
எங்குற்றான் என்பீர்கள் என்போல்வார் சிந்தையினும்
இங்குற்றான் காண்பார்க் கெளிது. சரு

எளிய திதுவன்றே ஏழைகாள் யாதும்
அளியீர் அறிவிலீர் ஆஆ - ஒளிகொள்மிடற்(று)
எந்தையராப் பூண்டுழலும் எம்மானை உள்நினைந்த
சிந்தையராய் வாழும் திறம். சசு

திறத்தால் மடநெஞ்சே சென்றடைவ தல்லாற்
பெறத்தானு மாதியோ பேதாய் - நிறத்த
இருவடிக்கண் ஏழைக் கொருபாக மீந்தான்
திருவடிக்கட் சேருந் திரு. சஎ

---

சச. மனக்கு - மனத்துக்கு. தனக்கே - சிவபிரானுக்கே.

சரு. நோக்கும் - மனத்தாற் கருதும்.

சசு. அளியீர் - கொடாதவரே. திருநீலகண்டத்தையுடைய எந்தையும், பாம்பைப் பூண்டுழலும் எம்மானும் ஆகிய இறைவனை. அரா - பாம்பு. திறம் (இயல்பு) எளியது இது அன்றே.

சஎ. பேதாய் - பேதையே. நிறத்த இருவடிக்கண் ஏழைக்கு - ஒளியுடைய இரண்டு வடுவகிர் போலுங் கண்களையுடைய உமாதேவியார்க்கு. திறத்தால் - இடையறாது தியானிக்கும் தன்மையால். பெறத்தானும் ஆதியோ - வேறு வழியில் பெறுதற்கும் வல்லையோ.

திருமார்பில் ஏனச் செழுமருப்பைப் பார்க்கும்
பெருமான் பிறைக்கொழுந்தை நோக்கும் - ஒருநாள்
இதுமதியென் றொன்றாக இன்றளவுந் தேறா(து)
அதுமதியொன் றில்லா அரா. சஅ

அராவி வளைத்தனைய அங்குழவித் திங்கள்
விராவு கதிர்விரிய வோடி - விராவுதலாற்
பொன்னோடு வெள்ளிப் புரிபுரிந்தாற் போலாவே
தன்னோடே ஒப்பான் சடை. சகூ

சடைமேலக் கொன்றை தருகனிகள் போந்து
புடைமேவித் தாழ்ந்தனவே போலும் - முடிமேல்
வலப்பாலக் கோல மதிவைத்தான் பங்கின்
குலப்பாவை நீலக் குழல். ருo

சஅ. ஏனச் செழு மருப்பை - பன்றியின் அழகிய கொம்பை. ஒரு நாள் - ஒரு நாளும். தேறாது - தெளியாது. மதி - சந்திரன். மதியொன்று இல்லா - அறிவு என்பது ஒன்று இல்லாத. அரா அது - பாம்பு அது. அரா, ஏன மருப்பையும் பார்க்கும்; பிறைக் கொழுந்தாகிய சந்திரனையும் நோக்கும்; இதுவே சந்திரன் என்று இன்னுந் தெரிந்து கொள்ளவில்லை. காரணம் அராவுக்கு மதியின்மையே. அரா, மதி பெறின் இதுவே சந்திரன் என்று பாய்ந்து பற்றும் என்றபடி.

சகூ. அராவி வளைத்து அனைய - அராவி வளைத்தாலென்ன. விராவு கதிர் - நெருங்கிய வெண்ணிலவு. விராவுதலால் - கலத்தலால். புரி புரிந்தால் - நூல் திரித்தால். தன்னோடே ஒப்பான் - தனக்குத் தானே ஒப்பாக உள்ள இறைவனுடைய. சடையாகிய பொன்னும் சந்திரனாகிய வெள்ளியும் புரி புரிந்தாற்போலாவே.

ருo. வலப்பால் - வலப்பக்கம். குலப்பாவை - உமையம்மையார். குழல் - மயிர். புடை - அருகில். குலப்பாவை நீலக்குழல் கொன்றை தரு கனிகள்...போலும்.

குழலார் சிறுபுறத்துக் கோல்வளையைப் பாகத்(து)
எழிலாக வைத்தேக வேண்டா - கழலார்ப்பப்
பேரிரவில் ஈமப் பெருங்காட்டிற் பேயோடும்
ஆரழல்வாய் நீயாடும் அங்கு. ருக

அங்கண் முழுமதியம் செக்கர் அகல்வானத்
தெங்கும் இனிதெழுந்தா லொவ்வாதே - செங்கண்
திருமாலைப் பங்குடையான் செஞ்சடைமேல் வைத்த
சிரமாலை தோன்றுவதோர் சீர். ருஉ

சீரார்ந்த கொன்றை மலர்தழைப்பச் சேணுலவி
நீரார்ந்த பேர்யாறு நீத்தமாய்ப் - போரார்ந்த
நாண்பாம்பு கொண்டசைத்த நம்மீசன் பொன்முடிதான்
காண்பார்க்குச் செவ்வேயோர் கார். ருங

காருருவக் கண்டத்தெங் கண்ணுதலே எங்கொளித்தாய்
ஓருருவாய் நின்னோ டுழிதருவான் - நீருருவ
மேகத்தாற் செய்தனைய மேனியான் நின்னுடைய
பாகத்தான் காணுமே பண்டு. ருச

---

ருக. கழல் ஆர்ப்ப - வீரக்கழல் ஒலிப்ப. ஈமப் பெருங்காட்டில் பேயோடும் - சுடுகாட்டில் பேயுடன். ஆர் அழல் வாய் - நிறைந்த நெருப்பினிடத்து. குழலார் சிறுபுறத்து கோல் வளையை - மயிர் படிந்துள்ள பிடரியையுடைய உமாதேவியாரை. பாகத்து - இடப்பாகம். எழிலாக - அழகு பொருந்த.

ருஉ. அம் கண் - அழகிய இடமகன்ற. செக்கர் - சிவப்பு. சிரமாலை தோன்றுவதோர் சீர், முழுமதியம் எழுந்தாலும் ஒவ்வாதே.

ருங. சேண் — ஆகாயத்து. பேர்யாறு - கங்கை. நீத்தம் - பெருக்கம். பாம்பு நாண். செவ்வே - காலம்; அழகிய. கொன்றையும் நதிப்பெருக்கும் கார் காலத்தைக் குறிப்பன.

ருச. நின்னோடு உழிதருவான் - உன்னுடன் கலந்து திரிபவன்; பிரியாதிருப்பவன் (உழிதரல் - திரிதல்). மேனியான் - திருமால். பண்டு - முன்னை நாளில்.

பண்டமரர் அஞ்சப் படுகடலில் நஞ்சுண்டு
கண்டங் கறுத்ததுவும் அன்றியே - உண்டு
பணியுறுவார் செஞ்சடைமேற் பால்மதியி னுள்ளே
மணிமறுவாய்த் தோன்றும் வடு. ருரு

வடுவன் றெனக்கருதி நீமதித்தி யாயின்
சுடுவெண் பொடிநிறத்தாய் சொல்லாய் - படுவெண்
புலாற்றலையி னுள்ளூண் புறம்பேசக் கேட்டோம்
நிலாத்தலையிற் சூடுவாய் நீ. ருசு

நீயுலக மெல்லாம் இரப்பினும் நின்னுடைய
தீய அரவொழியச் செல்கண்டாய் - தூய
மடவரலார் வந்து பலியிடார் அஞ்சி
விடஅரவம் மேலாட மிக்கு. ருஎ

மிக்க முழங்கெரியும் வீங்கிய பொங்கிருளும்
ஒக்க உடனிருந்தா லொவ்வாதே - செக்கர்போல்
ஆகத்தான் செஞ்சடையும் ஆங்கவன்றன் பொன்னுருவில்
பாகத்தாள் பூங்குழலும் பண்பு. ருஅ

---

ருரு. பணி உறு - பாம்பு வாழும். மணி - நீலமணியொத்த (வடு உண்டு). கண்டத்து வடு ஒன்று, பால் மதியிலுள்ள வடு மற்றொன்று என்றபடி.

ருசு. படு வெண்புலால் தலை - பிரம கபாலம். உள் ஊண் - அதனுள்ளே கொள்ளும் உணவை. புறம்பேச - புறங் கூற. வடு - குற்றம்.

ருஎ. மடவரலார் - பெண்கள். பலி - பிச்சை.

ருஅ. செக்கர் - சிவப்பு. ஆகத்தான் — உடலுடையவன். சிவத்தின் உரு தீ ; பொன். சக்தியின் உரு நீலம் ; இருள். சிவத்தின் சடை செம்பொன் நிறமுடையது ; சக்தியின் குழல் கருமையது.

பண்புணர மாட்டேன்நான் நீயே பணித்துக்காண்
கண்புணரு நெற்றிக் கறைக்கண்டா - பெண்புணரும்
அவ்வுருவோ மாலுருவோ ஆனேற்ருய் நீறணிவ
தெவ்வுருவோ நின்னுருவ மேல். ருகூ

மேலாய மேகங்கள் கூடியோர் பொன்விலங்கல்
போலாம் ஒளிபுதைத்தா லொவ்வாதே - மாலாய
கைம்மா மதகளிற்றுக் காருரிவை போர்த்தபோ(து)
அம்மான் திருமேனி அன்று. சூ0

அன்றுந் திருவுருவங் காணுதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் - என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது. சூக

ஏதொக்கும் ஏதொவ்வா தேதாகும் ஏதாகா(து)
ஏதொக்கும் என்பதனை யாரறிவார் - பூதப்பால்
வில்வேட ஞகி விசயனே டெற்றநாள்
வல்வேட ஞய வடிவு. சூஉ

---

ருகூ. ஆன் ஏற்ருய் - எருதை ஊர்தியாகக் கொண்டவனே. பண்பு - திருநீறணிவது எவ்வுருவோ என்னும் பண்பை(தன்மையை). பணித்துக்காண் - அருளிச்செய்வாயாக.

சூ0. மாலாய - மயக்கமுடைய. கைம்மா மதகளிறு-துதிக்கையும் மதமுமுடைய யானை. விலங்கல் - மலை.

சூக. இறைவனது சொருப இலக்கணங் கூறியவாறும். God is unknown and unknowable—*H. Spencer*.

சூஉ. பூதப்பால் - முன்னெருகாலத்தில் ஓரிடத்தில். (பூதம் - இறந்த காலம்). விசயனேடு எற்ற நாள் - அருச்சுனனேடு போர் புரிந்த நாளில்.

வடிவுடைய செங்கதிர்க்கு மாருய்ப் பகலே
நெடிதுலவி நின்றெறிக்குங் கொல்லோ - கடியுலவு
சொன்முடிவொன் றில்லாத சோதியாய் சொல்லாயால்
நின்முடிமேல் திங்கள் நிலா. ௬௩

நிலா இலங்கு வெண்மதியை நேடிக்கொள் வான்போல்
உலாவி யுழிதருமா கொல்லோ - நிலாவிருந்த
செக்கரவ் வானமே யொக்குந் திருமுடிக்கே
புக்கரவங் காலையே போன்று. ௬௪

காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு - மாலையின்
ருங்குருவே போலுஞ் சடைக்கற்றை மற்றவர்க்கு
வீங்கிருளே போலும் மிடறு. ௬௫

மிடற்றில் விடமுடையீர் உம்மிடற்றை நக்கி
மிடற்றில் விடங்கொண்ட வாறே - மிடற்றகத்து
மைத்தாழ் இருள்போலும் வண்ணங் கரிதாலோ
பைத்தாடும் நும்மார்பிற் பாம்பு. ௬௬

---

௬௩. கடியுலவு - சீருலவும். (சொற்கழிவு பாதமலர்— மணிவாசகனர்). ஆல் - அசை.

௬௪. நிலா இலங்கும் - நிலவு பொலியும். நேடிக்கொள்வான்- தேடிக்கொள்வான். உழிதருமா - திரியுமாறு. காலையே - காற்றையே.

௬௫. வேளைக்கு வேளை இயற்கையுறும் நிறங்கள் சிவபிரான் திருமேனியில் திகழ்தல் காண்க.

௬௬. பைத்தாடும் - படம் விரித்து ஆடும். உமக்கும் நீல கண்டம். உமது மார்பிலுள்ள பாம்புக்கும் நீலகண்டம். பாம்பு நீலத்தை எவ்விதம் பெற்றது? உமது கண்டத்தை நக்கிப்போலும் என்றபடி.

பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியுந்
தாம்பயின்று தாழருவி தூங்குதலால் - ஆம்பொன்
உருவடிவில் ஓங்கொளிசேர் கண்ணுதலான் கோலத்
திருவடியின் மேய சிலம்பு. சூஎ

சிலம்படியாள் ஊடலைத் தான்தவிர்ப்பான் வேண்டிச்
சிலம்படிமேற் செவ்வரத்தஞ் சேர்த்தி - நலம்பெற்(று)
எதிராய செக்கரினும் இக்கோலஞ் செய்தான்
முதிரா மதியான் முடி. சூஅ

முடிமேற் கொடுமதியான் முக்கணான் நல்ல
அடிமேற் கொடுமதியோங் கூற்றைப் - படிமேற்

---

சூஎ. பயின்று - பகை நீங்கப் பழக்கி. அருவி தூங்குதலால் - கங்கை சொரிதலால். பாம்பு முதலியன பழகித் தூங்குதலால் என்றுங் கொள்ளலாம். (பயின்று - தங்கி ; பொருந்தி எனினுமாம்). சிலம்பு ஆம் - சிலம்பு (வீரக்கழல்) அவருக்குப் பொருந்தும். பாம்பும் மதியும் பகையின்றி ஒன்றி வாழவும், மான் புலியுடன் அச்சமின்றி ஒன்றி யிருப்பவும் பயிற்றுதல் செயற்கருஞ் செயலாதலானும், பன்முகப் பெருக்குடைய கங்கையைச் சடையில் அடக்கி வைத்தலும் அருமைப் பாடாதலானும் சிவபெருமான் திருவடியில் வீரக்கழல் புனைந்திருத்தல் தகுதியாம் என்றபடி.

சூஅ. சிலம்பு அடியாள் - சிலம்பணிந்த பாதமுடைய உமா தேவியாரின். சிலம்பு அடிமேல் - அச் சிலம்பணிந்த திருவடி மீதூட்டியுள்ள. செவ்வரத்தம் - செம்பஞ்சை. முடிசேர்த்தி நலம் பெற்று எதிராய செக்கரினும் இக்கோலஞ் செய்தான் என்க. உமையம்மையாரின் ஊடல் போக்க அவர்தஞ் சிலம்படிமே லூட்டியுள்ள செம்பஞ்சை முடிமேல் சேர்த்துக் கோலஞ்செய்தான் என்றவாறு.

சூகூ. கொடு மதியான் - வளைந்த பிறையணிந்தவன் ; (கோடு- கொடு எனக் குறுகிற்று). நல்ல அடிமேற்கொடு - நல்ல திருவடி

குனியவல மாம் அடிமை கொண்டாடப் பெற்ரேம்
இனி அவலம் உண்டோ எமக்கு. சூசு

எமக்கிதுவோ பேராசை என்றுந் தவிரா(து)
எமக்கொருநாள் காட்டுதியோ எந்தாய்-அமைக்கவே
போந்தெரிபாய்ந் தன்ன புரிசடையாய் பொங்கிரவில்
ஏந்தெரிபாய்ந் தாடும் இடம். எ௦

இடப்பால வானத் தெழுமதியை நீயோர்
மடப்பாவை தன்னருகே வைத்தால் - இடப்பாகங்
கொண்டாள் மலைப்பாவை கூறென்றுங் கண்டிலங்காண்
கண்டாயே முக்கண்ணாய் கண். எக

கண்டெந்தை என்றிறைஞ்சிக் கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும் அதுவேண்டேன் - துண்டஞ்சேர்
விண்ணாளுந் திங்களாய் மிக்குலகம் ஏழினுக்கும்
கண்ணாளா ஈதென் கருத்து. எஉ

---

பைத் தலைமேற்கொண்டு. கூற்றை மதியோம் - யமனை மதியோம். படிமேல் குனிய வலம் ஆம் - பூமியில் தொண்டு செய்தற்கு வல்லமை கூட்டும். அடிமை கொண்டாடல் - அடிமைத்திறன் கொண்டாடல். அவலம் - துக்கம்.

எ௦. போந்து - பனை. இடம் காட்டுதியோ என்று கூட்டுக.

எக. மடப்பாவை - கங்கை. வானத்து எழுமதியை இடப்பால ......வைத்தால் என்றியைக்க. கூறு - தன்மை ; பிளவுமாம்.

எஉ. கைப்பணி - கைத்தொண்டு. திங்களாய் - சந்திரனை அணிந்திருப்பவனே. கண்ணாளா - கண்ணோட்டம் உடையவனே ; கருணை பொழிபவனே. வீடுபேற்றினுந் தொண்டு சிறந்ததெனக் கூறியவாறும்.

கருத்தினுல் நீகருதிற் றெல்லாம் உடனே
திருத்தலாஞ் சிக்கெனநான் சொன்னேன்-பருத்தரங்க
வெள்ளநீ ரேற்றுன் அடிக்கமலம் நீவிரும்பி
உள்ளமே எப்போதும் ஓது. எங

ஓத நெடுங்கடல்கள் அத்தனையும் உய்த்தட்ட
ஏது நிறைந்தில்லை யென்பரால் - பேதையர்கள்
எண்ணு திடும்பலியால் என்னே நிறைந்தவா
கண்ணுர் கபாலக் கலம். எச

கலங்கு புனற்கங்கை யூடாட லாலும்
இலங்கு மதியிலங்க லாலும் - நலங்கொள்
பரிசுடையான் நீள்முடிமேற் பாம்பியங்க லாலும்
விரிசடையாம் காணில் விசும்பு. எரு

விசும்பின் விதியுடைய விண்ணோர் பணிந்து
பசும்பொன் மணிமகுடந் தேய்ப்ப - முசிந்தெங்கும்
எந்தாய் தழும்பேறி ஏபாவம் பொல்லாவாம்
அந்தா மரைபோல் அடி. எசு

---

எங. திருத்தலாம் - செவ்வைப்படுத்திக் கொள்ளலாம். சிக்கென - உறுதியாக. பரு தரங்கம் - பெரிய அலை.

எச. கண்ணுர் - இடமகன்ற. கலம் - பாத்திரம். ஓதம் - குளிர்ச்சி பொருந்திய. உய்த்து அட்ட - பெய்து நிரப்ப.

எரு. கங்கையூடாடலாலும் - கங்கை பெருகிப் பாய்தலாலும். பரிசு - தன்மை ; கொடை. சடையை விசும்பு என்றவாறு. விசும்பு - வான். (வானிலுள்ள பாம்பு இராகு - கேது).

எசு. தேய்ப்பதால். முசிந்து - கன்றி. அம் தாமரை - அழகிய தாமரை.

அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரில் மாமுகடு பேரும் - கடகம்
மறிந்தாடு கைபேரில் வான்திசைகள் பேரும்
அறிந்தாடும் ஆற்ரு தரங்கு. எஎ

அரங்கமாய்ப் பேய்க்காட்டில் ஆடுவான் வாளா
இரங்குமோ எவ்வுயிர்க்கும் ஏழாய் - இரங்குமேல்
என்ஞகை வையான்தான் எவ்வுலகம் ஈந்தளியான்
பன்ஞள் இரந்தாற் பணிந்து. எஅ

பணிந்தும் படர்சடையான் பாதங்கள் போதால்
அணிந்தும் அணிந்தவரை யேத்தத் - துணிந்தென்றும்
எந்தையார்க் காட்செய்யப் பெற்ற இதுகொல்லோ
சிந்தையார்க் குள்ள செருக்கு. எகூ

---

எஎ. முகடு - வான்முகடு. மறிந்து - கீழும் மேலும் உழன்று தாக்கி. அரங்கு ஆற்ருது - சபை தாங்காது. ஆதலால் அறிந்து ஆடுக என்றபடி. இறைவன் அடி முடி கை முதலியன மாயா லோகங்களில் மட்டும் அடங்கிக் கிடப்பன அல்ல. அவை அவ்வுலகங்களைக் கடந்துஞ்செல்வன என்றபடி.

எஅ. எழாய் - ஏழையாய். வாளா - சும்மா. பன்ஞள் பணிந்து இரந்தால் (அதனுல்) இரங்குமேல் என்றியைக்க. என்ஞகை - ஒன்றும் ஆகும்படி. ஈந்து அளியான் - கொடுத்துக் காக்கமாட்டான்.

எகூ. பாதங்கள் பணிந்தும். போதால் - மலரால். அணிந்தவரை - அணிந்த அடியார்களை. சிந்தையார்க்கு - சிந்தைக்கு (உவப்பால் உயர்திணையாகக் கூறியதென்க). செருக்கு இதுகொல்லோ என்றபடி.

செருக்கினுல் வெற்பெடுத்த எத்தனையோ திண்தோள்
அரக்கனையும் முன்னிறுத்த தஃதே - திருத்தக்க
மாலயனுங் காணு தரற்றி மகிழ்ந்தேத்தக்
காலனையும் வென்றுதைத்த கால். அ௦

காலனையும் வென்ருேம் கடுநரகங் கைகழன்ருேம்
மேலை இருவினையும் வேரறுத்தோம் - கோல
அரணுர் அவிந்தழிய வெந்தியம் பெய்தான்
சரணுர விந்தங்கள் சார்ந்து. அக

சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே ஒத்திலங்கிச் சாராது
பேர்ந்தார்க்குத் தீக்கொடியின் பெற்றியதாம் - நேர்ந்துணரில்
தாழ்சுடரோன் செங்கதிருஞ் சாயுந் தழல்வண்ணன்
வீழ்சடையே என்றுரைக்கும் மின். அஉ

மின்போலுஞ் செஞ்சடையான் மாலோடும் ஈண்டிசைந்தால்
என்போலும் காண்பார்கட் கென்றிரேல்-தன்போ
பொற்குன்றும் நீல மணிக்குன்றுந் தாமுடனே [லும்
நிற்கின்ற போலும் நெடிது. அங

அ௦. வெற்பு எடுத்த - கயிலாய மலையை எடுத்த. எத்தனையோ- இங்கே இருபது ; இரண்டுக்கு மேற்பட்டமையான் எத்தனையோ என்றது. முன் இறுத்தது - முன்னே நசுக்கியது. அரற்றி - ஓலமிட்டு. அஃதே கால் என்றபடி.

அக. கோல அரணுர் - அழகிய முப்புரத்தார். வெம் தீ அம்பு எய்தான்.

அஉ. தாழ் சுடரோன் செங்கதிரும் சாயும் - தங்கும் ஒளி வாய்ந்த சூரியனுடைய சிவந்த கிரணமும் தோல்வியுறும். சடை சார்ந்தார்க்கு ......பெற்றியதாம். மின் உரைக்கும் - பெண் உரைப்பள் ; (மின் - மின்னுமாம்).

அங. காண்பார்கட்கு என்றிரேல் - பார்ப்பவர்கட்கு எவ்வாறு தோன்றும் என்று கேட்பீராயின்.

நெடிதாய பொங்கெரியுந் தண்மதியும் நேரே
கடிதாங் கடுஞ்சுடரும் போலும் - கொடிதாக
விண்டார்கள் மும்மதிலும் வெந்தீயி னுலழியக்
கண்டாலும் முக்கணான் கண். அச

கண்ணாரக் கண்டும்என் கையாரக் கூப்பியும்
எண்ணார எண்ணத்தால் எண்ணியும் - விண்ணோன்
எரியாடி என்றென்றும் இன்புறுவன் கொல்லோ
பெரியானைக் காணப் பெறின். அரு

பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ(து)
உறினும் உறுதொழியு மேனுஞ் - சிறிதுணர்த்தி
மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான் றன் பேயாய
நற்கணத்தி லொன்றாய நாம். அசு

நாமாலை சூடியும் நம்மீசன் பொன்னடிக்கே
பூமாலை கொண்டு புனைந்தன்பாய் - நாமோர்
அறிவினையே பற்றினால் அற்றே கெடுமே
எறிவினையே என்னும் இருள். அஎ

---

அச. விண்டார்கள் - பகைவர்களின். கண்டாலும் - செய்தாலும். எரியும் - அக்கினியும். மதியும் - சந்திரனும். கடுஞ்சுடரும் - சூரியனும். கண் மூன்று ; அவை சோம சூரி யாக்கினி. கண் - கண்ணோட்டமே ; அருளே என்றபடி. 'முக்கணாங் கண்' என்பதும் பாடம்.

அரு. எண்ணார - கருத்தார ; மனமார.

அசு. ஈது - பேயாய பேறு.

அஎ. மாலை - பாமாலை. ஓர் அறிவினையே - ஒப்பற்ற சிவ ஞானத்தையே. எறி - அழிக்கும் ; பாயும் ; கொட்டும். அற்றே - அன்றே ; அப்பொழுதே.

இருளின் உருவென்கோ மாமேகம் என்கோ
மருளின் மணிநீலம் என்கோ - அருளெமக்கு [யம்
நன்றுடையாய் செஞ்சடைமேல் நக்கிலங்குவெண்மதி
ஒன்றுடையாய் கண்டத் தொளி. அஅ

ஒளிவில்லி மன்மதனை ஒண்பொடியா நோக்கித்
தெளிவுள்ள சிந்தையினிற் சேர்வாய் - ஒளிநஞ்சம்
உண்டவா யஃதிருப்ப உன்னுடைய கண்டமிருள்
கொண்டவா றென்னிதனைக் கூறு. அகூ

கூறெமக்கீ தெந்தாய் குளிர்சடையை மீதழித்திட்(டு)
ஏற மிகப்பெருகின் என்செய்தி - சீறி
விழித்தூரும் வாளரவும் வெண்மதியும் ஈர்த்துத்
தெழித்தோடுங் கங்கைத் திரை. கூ0

திரைமருவு செஞ்சடையான் சேவடிக்கே ஆளாய்
உரைமருவி யாமுணர்ந்தோங் கண்டீர் - தெரிமினோ
இம்மைக்கும் அம்மைக்கும் எல்லாம் அமைந்தொழிந்தோம்
எம்மைப் புறனுரைப்ப தென். கூக

---

அஅ. எமக்கு (எம்பொருட்டு) அருள் நன்றுடையாய். நக்கு இலங்கும் - சிரித்து (ஒளிசெய்து) விளங்கும். கண்டத்து ஒளியை இருளின் உருவென்கோ......... மருளில் - மயக்கமில்லாத.

அகூ. ஒளியுடைய வில்லியாகிய ; ஒளி, மறைவுமாம். சிந்தையினிற் சேர்வோனே.

கூ0. தெழித்து - இரைந்து. கங்கையின் அலைகள், பாம்பையும் சந்திரனையும் ஈர்த்துக்கொண்டு சடையையும் அழித்து மேலும் பெருகியோடினால் என் செய்வாய் என்றபடி.

கூக. திரை - அலையையுடைய கங்கை. உரை மருவி - அவன் திருப்புகழையோதி. அம்மைக்கும் - மறுமைக்கும். புறனுரைப்பது - புறங்கூறல்.

என்னை யுடையானும் ஏகமாய் நின்றானும்
தன்னை யறியாத தன்மையனும் - பொன்னைச்
சுருளாகச் செய்தனைய தூச்சடையான் வானோர்க்(கு)
அருளாக வைத்த அவன். ௬௨

அவன்கண்டாய் வானோர் பிரானாவான் என்றும்
அவன்கண்டாய் அம்பவள வண்ணன் - அவன்கண்டாய்
மைத்தமர்ந்த கண்டத்தான் மற்றவன்பால் நன்னெஞ்சே
மெய்த்தமர்ந்தன் பாய்நீ விரும்பு. ௬௩

விருப்பினால் நீபிரிய கில்லாயோ வேறா
இருப்பிடமற் றில்லையோ என்னோ - பொருப்பன்மகள்
மஞ்சுபோல் மால்விடையாய் நிற்பிரிந்து வேறிருக்க
அஞ்சுமோ சொல்லாய் அவள். ௬௪

அவளோர் குலமங்கை ஆகத் தகலாள்
இவளோர் சலமகளும் ஈதே - தவளநீ(று)
என்பணிவீர் என்றும் பிரிந்தறியீர் ஈங்கிவருள்
அன் பணிவார் சொல்லுமினிங் கார். ௬௫

---

௬௨. ஏகமாய் - ஒருவனாய் ('ஓசைஒலி......உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே'—அப்பர்). 'தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ'—திருவாசகம். செய்து அனைய - செய்தாற் போன்ற. தூ - தூய; பரிசுத்தமான.

௬௩. அம்பவள வண்ணன் - அழகிய பவள நிறத்தவன். மைத்து - கறுத்து.

௬௪. மஞ்சுபோல் - மேகம் போன்ற. பொருப்பன் மகள் - மலையரையன் மகள்; உமையம்மையார். நின்னைப் பிரிந்து.

௬௫. அவள் - உமை. ஆகம் - உடல். சலமகள் - கங்கை. ஈதே - இப்படியே; பிரியாள் என்றபடி. தவளநீறு - திரு வெண்ணீறு. இருவரையும் பிரிந்தறியீர். அன்பு அணிவார் - நும்மாட்டு அன்பை அணிந்துள்ளவர்.

ஆர்வல்லார் காண அரனவனை அன்பென்னும்
போர்வை யதனாலே போர்த்தமைத்துச் - சீர்வல்ல
தாயத்தால் நாமுந் தனிநெஞ்சி னுள்ளடைத்து
மாயத்தால் வைத்தோம் மறைத்து. கசு

மறைத்துலக மேழினிலும் வைத்தாயோ அன்றேல்
உறைப்போடும் உன்கைக்கொண் டாயோ-நிறைத்திட்
டுளைந்தெழுந்து நீயெரிப்ப மூவுலகும் உள்புக்(கு)
அளைந்தெழுந்த செந்தீ யழல். கஎ

அழலாட அங்கை சிவந்ததோ அங்கை
அழகால் அழல்சிவந்த வாறோ - கழலாடப்
பேயாடு கானிற் பிறங்க அனலேந்தித்
தீயாடு வாய்இதனைச் செப்பு. கஅ

செப்பேந் திளமுலையாள் காணவோ தீப்படுகாட்(டு)
அப்பேய்க் கணமவைதாங் காணவோ - செப்பெனக்கொன்
றாகத்தா னங்காந் தனலுமிழும் ஐவாய
நாகத்தா யாடும் நடம். கக

---

கசு. தாயத்தால் - உரிமையால். ஆண்டவனைக் காண்டற்கு அன்பே வழி என்றவாறு. அவ்வன்பு பிறர் கண்ணுக்குப் புலனாகாதது என்று அறிவுறுத்தியவாறு காண்க.

கஎ. நீ எரிப்ப உளைந்து (சுடர்விட்டு) எழுந்து மூவுலகும் நிறைத்திட்டு உள்புக்கு. அளைந்து - மற்றப் பொருள்களோடுங் கலந்து. உறைப்போடு - எரிவோடு.

கஅ. கழலாட - வீரக்கழலாட. பிறங்க - விளங்க.

கக. அங்காந்து - வாய் திறந்து. ஐவாய நாகத்தாய் - ஐந்து வாய்ப் பாம்பை அணிந்தவரே. தீப்படுகாட்டு - சுடுகாட்டு. ஒன்றாக - (இப்படியாவது அப்படியாவது) ஒரு வழியில்.

நடக்கிற் படிநடுங்கும் நோக்கிற் றிசைவேம்
இடிக்கில் உலகனைத்தும் ஏங்கும் - அடுக்கல்
பொருமேறோ ஆனேறோ பொன்னொப்பாய் நின்னே(று)
உருமேறோ அன்றோ உரை. கoo

உரையினால் இம்மாலை அந்தாதி வெண்பாக்
கரைவினாற் காரைக்காற் பேய்சொற் - பரவுவார்
ஆராத அன்பினோ டண்ணலைச்சென் றேத்துவார்
பேராத காதல் பிறந்து. கoக

திருச்சிற்றம்பலம்



கoo. பொன் ஒப்பாய் நின் ஏறு. படி - பூமி. திசைவேம் - திசைகள் வேகும். அடுக்கல் - மலையில். பொரும் ஏறோ - போர் புரியுஞ் சிங்க ஏறோ. ஆன் ஏறோ - எருதோ. உரும் ஏறோ - இடியேறோ.

கoக. கரைவினால் - உருகிய அன்பால். போராத - நீங்காத. காரைக்கால் பேய் - காரைக்கால் அம்மை. பூதவுடலெனும் பிரகிருதி மாயாப் பருவுடலை உதறி, நுண்ணுடலெனும் ஞானவுடலைப் பெற்றமையை அம்மையார் பேய் என்று கூறலானார்.